திருவறம் வளர்க :

# அக்ஷய திருதியை



ஆசிரியர்

வாணிபூஷன் பிரதிஷ்டாசார்ய

காவ்யதீர்த்த, சாஹித்யரத்ன

**ஆ. சிம்மசந்திர ஜைன் சாஸ்திரியார்**

வெளியீடு

**சம்யக் ஞான பிரசார சங்கம்**

8, முதல் குறுக்குத் தெரு,

கேசரி நகர், ஆதம்பாக்கம், சென்னை - 600 088.

ஸ்ரீ வீதராகாய நம:

# அக்ஷய திருதியை

(இரண்டாம் பதிப்பு)

ஆசிரியர்
வாணிபூஷன் பிரதிஷ்டாசார்ய
காவ்யதீர்த்த, சாஹித்யரத்ன
**அ. சிம்மசந்திர ஜைன் சாஸ்திரியார்**

வெளியீடு
**சம்யக் ஞான பிரசார சங்கம்**
1/8, முதல் குறுக்குத் தெரு,
கேசரி நகர், ஆதம்பாக்கம், சென்னை - 600 088.
2008

# நூல் பற்றிய தகவல்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அக்ஷய திருதியை |
| ஆசீர்வாதம் | : | பரம பூஜ்ய ஸ்ரீ 108 விவர்ஜன சாகர் முனிவர்<br>பூஜ்ய 105 ஆர்யிகை சிந்தன் ஸ்ரீமாதாஜீ |
| நூல் ஆசிரியர் | : | திரு. ஆ. சிம்ம சந்திர ஜைன் சாஸ்திரியார் |
| பொருள் | : | அறம் |
| மொழி | : | தமிழ் |
| நூலின் அளவு | : | கிரவுன் |
| பக்கம் | : | 76 + 6 |
| முதற்பதிப்பு | : | 1983 |
| இரண்டாம் பதிப்பு | : | 2008 |
| தாள் | : | 70 ஜி. எஸ்.எம் |
| வெளியீடு | : | சம்யக் ஞான பிரசார சங்கம் |
| முகவரி | : | எண். 1/2, முதல் குறுக்குத்தெரு<br>கேசரி நகர், ஆதம்பாக்கம்<br>சென்னை - 600 088. |
| கிடைக்குமிடம் | : | சம்யக் ஞான பிரசார சங்கம்<br>1/8, முதல் குறுக்குத் தெரு, கேசரி நகர்,<br>ஆதாம்பாக்கம், சென்னை-600 088. |
| அச்சிட்டோர் | : | **Eyewire,** Chennai - 33.<br>98410 22103, 98414 2214, 98419 43760 |

# முன்னுரை

"அக்ஷய திருதியை" என்னும் இந்நூல் ஜைன அறத்திற்கு முதல் தீர்த்தங்கரராகிய பகவான் விருஷப தேவர் வாழ்க்கையில் நிகழ்ந்த வரலாற்றினை எடுத்துரைக்கும் சிறந்த நூல்.

"அக்ஷய திருதியை" என்கிற சொல்லைக்கேட்டவுடனே ஜைனப் பெருமக்களுடைய உள்ளத்தில் ஆகாரதானத்தின் சிறப்பு நினைவிற்குவரும். ஸ்ரேயாம்ச குமாரர் வழங்கிய ஆகாரதானத்தின் வரலாற்றினை என்றென்றும் நினைவுறுத்தும் வகையில் பாரததேச முழுதுமுள்ள ஜைனப் பெருமக்கள் ஒவ்வொரு ஆண்டும் வைகாசி மாதம் சுக்லபக்ஷம் திருதியை அன்று இவ்விழாவைக் கொண்டாடுகின்றனர்.

"அக்ஷய திருதியை" வரலாற்று உண்மையை அறிவிக்கும் நாள் ஆனபோதிலும் இஃது ஒரு சிறந்த பருவநாள் என்பதையும் அதன் பெருமையையும், அருமையையும் விளக்கும் இந்தப் புனித நாளில் மக்கள் செய்யவேண்டிய கடமையை உணர்த்துவதற்கெனவே இஃது எழுதப்பட்டது.

இந்நூலில் விருஷபதேவருக்கு நிகழ்ந்த வினையின் பயன், வினையின் வலிமை, அதை வெல்லும் வழி, ஆன்மபலம், தவத்தின் அவசியம், தியானத்தின் சிறப்பு, மௌன விரதத்தின் மேன்மை, தானத்தின் பலன், ஸ்ரேயாம்ச குமாரரின் பெருமை, வர்ஷி தவத்தின் நோக்கம், இல்லறத்தாரின் கடமை, அக்ஷய திருதியை என்னும் பெயர் வரக்காரணம், பருவத்திற்கும் பண்டிகைக்கும் உள்ள வேறுபாடு, ஆகியவை பற்றி நன்கு விளக்கப்பட்டுள்ளது. வாசகர்கள் ஒவ்வொரு ஆண்டும் அக்ஷய திருதியையன்று இதைப் படித்து பருவத்தின் சிறப்பினை எல்லோருக்கும் எடுத்துக் கூற வேண்டுமென்று வேண்டுகிறேன்.

ஜைனாசார்ய பூஜ்ய அமூலக்ருஷி மகராஜ் அவர்கள் இந்தியில் எழுதிய "அக்ஷய திருதியா" என்னும் நுலையும் ஜினசேனாசார்யர் எழுதிய "மகாபுராணம்" என்னும் வரலாற்று நூலையும் தழுவி எழுதப்பட்ட இந்நூல் தமிழ் ஜைன சமூகத்திற்கு புதிய நூலாகத் திகழ்கிறது. இது தற்கால மக்களுக்கு மிகவும் பயன்படும் என்று கருதுகிறேன்.

சமூகத்தில் பல பண்டிகைகள் வருகின்றன. விரதங்கள் அனுசரிக்கப்படுகின்றன. ஆனால் அவைகளின் உண்மை வரலாற்றினை அறியாதவர் பலர் உள்ளனர். ஒவ்வொரு பண்டிகை மற்றும் விரதம் ஆகியவற்றின் சிறப்பினையும் கடைபிடிக்கும் வழிமுறைகளையும் விளக்கி புத்தகமாக எழுதி தமிழக மக்கள் அறியும் வண்ணம் செய்யவேண்டுமென்கிற பேராவல் எனக்கு உண்டு. இந்நூல் தமிழில் முதல் நூலாக அமைந்துள்ளதைக். கருதி நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். இதில் ஏற்பட்ட அச்சுப் பிழையை நீக்கி செம்மைபடுத்தித் தந்த பேராசிரியர், திரு. கனக அஜிததாஸ் அவர்களுக்கு மிக்க நன்றி உறித்தாகுக.

இந்த புத்தகத்தை அச்சிட்டு வழங்க ஆர்வம் கொண்ட விருதுர் திரு. சந்திரநாத நயினர் குமாரர் திரு. விருஷபதாஸ் அவர்களுக்கும் அவர்தம் மனைவியார் திருமதி. நாகசுந்தரி அவர்களுக்கும் அவர்கள் மகள் திருமதி. சாந்தி, மருமகன் திரு. அனந்தவிஜயன், மகள் திருமதி. வித்யா, மருமகன் விஜயசேனன், பேரன் தினேஷ், சுபாஷ், திவ்யப்பிரகாஷ், அவர்களுக்கும் மிக்க நன்றி.

இப்புத்தகத்ததை மிகவும் அழகாகவும் செம்மையாகவும் குறித்த நேரத்தில் அச்சிட்டுத்தந்த **EYEWIRE** பிரிண்டர்ஸ் அச்சகத்தாருக்கும் நன்றி.

இங்ஙனம்
**A.** சிம்மசந்திர ஜெயின் சாஸ்திரி
ஆதம்பாக்கம்

வாழிய நல்லறம் !

# பகவான் விருஷபதேவர்

## வரலாற்றுத் துதிப் பாடல்

இராகம் : யமுனா கல்யாணி தாளம் : ஆதி

1 மக்கள் வாழ்வை மலரச்செய்யும் கற்பகங்கள் மறைந்தன
மன்னுயிர்கள் யாவும் துயரக்கடலிலாழ்ந்தன
திக்கிலாத நிலையில் மக்கள் திகைத்து நின்றனர் - தீய
திசையில் வாழ்வு திரும்பிய தென் றேக்கங் கொண்டனர்

2. சக்கரம் போல் சுழலும் கால நிலையை எண்ணினர் சிலர்
சலித்து வாழ்வைத் துணிந்து தீர வழியை நண்ணினர்
இக்கொடுமை நிகழுமென்று இயற்கை உணர்ந்துமே -ஆதி
இறைவனையே தோற்றுவித்த இயல்பைக் கேளுமே

தொஹைரா

3. அயோத்தியாண்ட நாபி மருதேவி மகனாரே - இந்த
அவலம் போக்க இடபவேர் ஆட்சி பெற்றாரே
தயா உள்ளம் கொண்ட மகான் தரையை நோக்கினார்- சிறு
தாமத மிலாது மக்கள் துயரை போக்கினார்.

4. அரசர் வணிகர் வேளாளராய்ப் பலரை நாட்டினார் -அன்றே
அவரவர்க் குரியதொழில் முறையைக் காட்டினார்
விரைவில் எண் எழுத்திரண்டும் இயற்றிக்கற்பித்தார் -அறிவு
விளங்கக்கலைகள் இசைகள் யாவும் விரிவாய்ப் போதித்தார்

5. ஆருயிர்கள் யாவும் இன்பம் அடைந்து வாழவே - உயர்
அறமாம் கொல்லா நெறிவகுத்தார் பலரும் ஏற்கவே
சீருசால் மனையறமும் துறவறமுமே - உயிர்
செம்மையுற்று உயருமென்று செப்பினர் தாமே

பாட்டு

6. மாண்பு மிக்க மக்கள் சமுதாயம் கண்டாரே - அவரை
மண்ணும் விண்ணும் போற்றப்பரதநாட்டை ஆண்டாரே
சேண்புகழ் வாழ்ந்த மனை வாழ்வை வெறுத்துமே - தாம்
செப்பிய சீர் துறவறத்தில் சிந்தை கொண்டுமே.

7. அருளறம் பிறந்த இந்த அரிய நாட்டையே - ஆள
அருமை மகனும் பரதனுக்குப் பட்டம் சூட்டியே
கருணை ஆட்சி புரிய மன்னர் கடமை உணர்த்தினார் -அவர்
கருத்தில் கொண்ட தவநெறியைக் கடிதில் பற்றினார்.

8. இட்சுவாகு மன்னர் துறவரசராயினார் - தவம்
இயற்றக் கைலை மலையை நண்ணி அறிவராயினார்
சிக்கல் செய்யும் வினைகள் யாவும் சிதற வீழ்த்தியே - தவச்
செம்மல் விருஷப தேவர் சென்றார் வீடு பற்றியே

8. தலைவர்தம் தலைவருக்கும் தலைவராயினார் - செந்
தாமரை மேல் நடந்து உலகக்குருவுமாயினார்
நிலையிலாத வாழ்வைக் காட்டும் நீலமேகமே - இதை
நினைத்து நிமலன் சீல நெறியில் சென்று வாழ்வமே (மக்)

ஆக்கியோன் - ஜீவபந்து T.S. ஸ்ரீ பால்

# அசூய திருதியை

உலகத்தில் குணம், குணமுடையது எனப் பொருட்கள் இருவகை உள்ளன. இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று முற்றிலும் வேறுபட்டவை என்றோ வேறுபடாதவை என்றோ கூற முடியாது. குணம் உருவமாகவும் உருவம் குணமாகவும் மாறுவதில்லை. ஆனால் சிற்சில நேரங்களில் உருவம் நமக்கு காணப்படும்போது குணமும் நம்மால் அறியப்படுகிறது என்றாலும் ஒன்று புலப்படும்போது மற்றொன்று நமக்குத் தெரிவதில்லை மறைந்துவிடுகிறது. ஆனால் அப்படி தோன்றாததற்கு நம்முடைய மயக்கமே காரணமாகும். மந்திரக்காரன் காணப்படுவதை காணமுடியாததாகவும், காணாததை காணப்படுவதாகவும் காட்டுகிறான். ஆனால் அந்த அதிசயம் நம்முடைய அறியாமையின் காரணமாகும். அது பற்றிய ஞானம் நம்மிடம் இல்லாமையினால். அது நமக்கு அதிசயமாகத் தோன்றுகிறது.

கற்கண்டின் குணம் இனிப்பு, கற்கண்டு நமக்குக் காணப்படுகிறது. ஆனால் அதன் குணமாகிய இனிப்பு நமக்குக் காணப்படுவதில்லை. ஆனால் அதன் உருவைக்கண்டு அதன் குணத்தை அறிகிறோம். கற்கண்டை நீரில் கரைத்துவிட்டால் அதன் உருவம் மறைந்துவிடுகிறது. அப்போது அதன் சுவை குணம் அதன் உருவ அமைப்பை நினைவூட்டுகின்றது.

உருவமும் குணமும் உடையதே பொருள். ஒன்று விட்டு மற்றொன்று இருக்காது. கற்கண்டு கரைந்த நீரில் கற்கண்டு என்னும் பொருள் உள்ளது. ஆனால் அது இப்பொழுது கண்ணுக்குக் காணப்படவில்லை. இதுபோலவே மற்ற பொருட்களைப் பற்றியும் அறிதல் வேண்டும்.

உருவமும் குணமும் இணைந்தே இருக்கும். ஒன்றை விட்டு மற்றொன்று பிரிந்து இருக்காது. நீரில் கரைந்த கற்கண்டிற்கும் உருவம் உண்டு. கற்கண்டு கரைந்த தண்ணீரை நெருப்பில் காய்ச்சினால் நீர் ஆவியாகி கற்கண்டு உருவாவதைக் காணலாம். இங்கு தண்ணீர் ஆவியாக மாறுவது நம்முடைய பார்வைக்குப் புலப்படவில்லை. இதுபோலவே தான் மற்ற பொருட்களைப் பற்றியும் அறிதல் வேண்டும்.

சிறந்த குணத்தைப் பெற்ற மனிதன் " வினை" என்னும் நீரை ஆவியாக்கி அல்லது வற்றச்செய்து தூய ஞான ஒளியைப் பெறுகிறான். அத்தகு தூய ஞானத்திற்கு முழுதுணர் ஞானம் எனப்பெயர் இந்த ஞானத்தைப்பெற்றவர் குணத்தையும் குணமுடையதையும் ஒருங்கே அறிந்து கொள்ளுகிறார். அவர் ஞானத்தை மறைக்கும் வினையிலிருந்து விலகியவராக ஆகிறார்.

இத்தகு சிறப்புநிலை எய்தியவர் எல்லா இடங்களிலும் எப்பொழுதும் தோன்றுவதில்லை. சிற்சில இடங்களில் சில காலங்களில்தான் தோன்றுவர். எளிய மனிதர் இத்தகு சிறப்பு நிலை பெற என்ன வழி? என்னும் வினா ஏற்படுகிறது

சிறந்த குணத்தைப் பெற்றவர் இல்லாத காலத்தே சாதாரண மக்கள் மேன்மையடைய வேண்டிய வழிமுறைகள் உணர்த்தப்படாது போனால் அந்தப் பெரியோர்களின் தம் சிறப்பும் மேன்மையும் குறைந்துவிடுமோ? உண்மையில் குறைவதில்லை சிந்தித்துப் பார்த்தால் சாதாரண மக்கள் மேன்மையடைய வேண்டிய வழிமுறைகளைக் கூறி சிறந்த குணத்தைப் பெற்ற மகான்கள் சென்ற அடிச் சுவட்டில் செல்வதே சாதாரண புருடர்கள் மேன்மையடையக் காரணமாகும். அப்படி செயல்படும்போது சாதாரண மனிதர்களது செயல் சிறப்புப் பெற்றதாக ஆகிவிடும். அப்பொழுது அவர்கள் தன்னம்தானே முழு இன்ப உலகில் அடிவைக்கின்றனர். அப்பொழுதுதான் சாதாரண மக்களுக்கு அந்த ஆனந்த உலகின் வாயில் திறந்து வைக்கப்படுகிறது.

அடிப்படை தத்துவப்படி எல்லோருடைய ஆன்மாவும் ஓரே விதமான குணத்தைப்பெற்றதே. எல்லா ஆன்மாவும் சமான பிரதேசத்தைப் பெற்றது. எல்லா ஆன்மாவிடமும் சிறந்த ஒளிமயமான சக்திகள் உள்ளன. எல்லாவிதமான எல்லையற்ற தடுக்கமுடியாத ஆனந்தமும் இருக்கின்றது. எல்லா ஆன்மாவிடத்திலும் முடிவில்லாத ஒளியும் விளக்குதற்கு அப்பாற்பட்ட சக்தியும் உள்ளடங்கியுள்ளது. எவ்வித குணத்திலும் ஏற்றத் தாழ்வோ, எவ்வித பலத்திலும் குறைபாடோ கிடையாது, அப்படி இருந்த போதிலும் வினைகளுக்கு கட்டுண்டபடியால் பிறவிச்சுழல் என்னும் சிறையின் அடைக்கப்பட்டுள்ளதாக உள்ளது. ஆனால் அவற்றுள் எந்த ஆன்மா பெரும் முயற்சியினரால் தன்னுடைய இயல்பான பலத்தைப் பெற்று தூயத்தன்மையை வெளிப்படுத்துகிறதோ அதுவே சிறந்த ஒப்பற்ற உயர்வைப்

பெறுகிறது. ஆழமாகவும் வெகு வேகமாகவும் பெருக்கெடுத்து இருகரைகளையும் உடைத்துக்கொண்டு தங்கு தடையின்றி ஓடும் வெள்ளத்தைப் போன்று ஆன்மா நல்வினை, தீவினை, என்னும் இரு வினைகளைப் போக்கி பிறவிப்பிணியிலிருந்து விடுதலை அடைகிறது. அத்தகு ஆத்மாதான் மற்ற உயிரினங்களுக்கு நல்வழி காட்டும் நல்ல கலங்கரை விளக்கு போல் அமைகிறது.

சமூகத்தில் திருவிழாக்களும், பெருவிழாக்களும் பல உள்ளன. தீபாவளி, பர்யூஷணம், ஆவணி அவிட்டம் முதலான அறத்தொடர்பான பருவத் திருநாட்களும், பொங்கல், நவராத்திரி போன்ற சமூகத்தை ஒட்டிய பண்டிகை விழாக்களும், சுதந்திரநாள், குடியரசுநாள், காந்தி ஜெயந்தி போன்ற நாட்டு விழாக்களும் உள்ளது போன்று "அக்ஷய திருதியை" என்னும் புனிதத்திருநாளும் ஒன்றாகும்.

அறப்பாதையைவிட்டு தீய பாதையில் செல்லும் அஞ்ஞானி களுக்கு நல்வழி காட்டும் திசை காட்டியாக "அக்ஷய திருதியை" உள்ளது. நல்வாழ்வு தடைபட்டு வினை என்னும் இருளில் சிக்குண்டு நாற்கதி என்னும் சுழற்சியில் தவிக்கும் மனிதனுக்கு நல்வாழ்க்கை என்னும் நல்லொளி காட்டி நல்லறப்பாதையில் நடக்க வைக்கும் நல்ல விளக்காக உள்ளது இந்த "அக்ஷய திருதியை". இஃது உலக வாழ்வில் மறைந்து கிடக்கும் மாபெரும் புனித ஆன்மாவின் அடையாளமாகும். வழி தவறி நடக்கும் வழிப் போக்கனுக்குக் கை கொடுத்து நல்வழியில் கொண்டு போய் விடும் உதவியாளனைப் போன்று அமைந்துள்ளது இந்த "அக்ஷய திருதியை" பருவம். இது திசை காட்டும் கருவி போன்று

உள்ளது. இஃது ஒவ்வொரு ஆண்டும் வைசாக சுக்ல திருதியை நாள் அன்று வருகிறது.

வழி மறந்து அல்லல்படும் மாலுமிக்குத் திசையைக் காட்டும் கருவி மாலுமியின் கைகளைப் பிடித்து வழி நடத்துவதில்லை! அறிவுடையவனே அதனைப் பார்த்து சரியான பாதையை அறிந்து கொள்கிறான். அறியும் தன்மை அற்றவனுக்கு திசைகாட்டும் கருவி யாதும் செய்யாது. "அக்ஷய திருதியை" பருவமும் கூட முக்திப்பாதையை அறிவிக்க வல்லதே தவிர முக்திக்குக் கொண்டு போய் சேர்ப்பது அது அல்ல. உண்மை உணர்வும், அறிவாற்றலும், ஆன்மீக நம்பிக்கையும் உள்ள மனிதனுக்கு தான் இது அறவழி காட்டும் பருவமாக அமைகிறது.

விளக்கு நான்கு திசைகளிலும் சூழ்ந்து கிடக்கும் இருளை அகற்றி வழிகாட்டும் பணியைச் செய்கிறது. பாதையில் ஒருவனை சேர்ப்பது அதனுடைய வேலை அல்ல. பாதையில் உள்ள பள்ளத்தைக் காட்டுவது வெளிச்சத்தின் வேலை. அப்பள்ளத்திலிருந்து தப்பித்துச் செல்லும் பொறுப்பு வழிபோக்கனுடையது, அதுபோலவே அறியாமை (அஞ்ஞானம்) என்னும் இருள் சூழ்ந்த பள்ளத்தில் விழுந்துக்கிடக்கும் மனிதர்களுக்கு நல்லறமென்னும் ஒளியினைக் காட்டுவது "அக்ஷய திருதியை". அஞ்ஞானமென்னும் இருள் நிரம்பிய பள்ளத்திலிருந்து வெளியேற்றும் பொறுப்பு அதனுடையது அல்ல, இருள்சூழ்ந்த பள்ளத்திலிருந்து வெளியேற வேண்டு மென்கிற ஆர்வமும் ஆற்றலும், மனிதனுடைய உள்ளத்தில் ஏற்படுமாயின் "அக்ஷய திருதியை" அவனுக்கு வழி காட்டக் கூடும்.

நல்லறப்பாதையில் உள்ள வினை என்னும் கற்களில் மோதாதவாறு அது தடுக்கவும் கூடும். அந்த "அக்ஷய திருதியை" உலக உயிரினங்களுக்கென வந்து கடந்த காலத்தில் நிகழ்ந்த இனிய புனித வரலாற்றினை அறிவுறுத்திச் சென்று விடுகிறது.

மக்கள் தத்தம் கருத்துகளுக்குத் தக்கவாறு பருவ நாட்களுக்கு வெவ்வேறு விதமான சிறப்பினை அளித்துள்ளனர். சில பருவத்தை பெரியதாகவும் சில பருவத்தை சிறியதாகவும் கருதுகின்றனர். ஆனால் உண்மையில் எந்த பருவமும் சிறியதும் அல்ல பெரியதும் அல்ல. எல்லாவற்றிற்கும் பருவம்தான் முக்கியமென்று ஏற்றுக் கொண்டால் ஒவ்வொரு ஆண்டும் எத்தனையோ பருவங்கள் வருகின்றன அவைகளால் இவ்வுலகமே மேன்மையடைந்திருக்குமல்லவா? அறத்திற்கு பருவம் துணைக்காரணம் பரிணாமம் மூலகாரணம் என்பதை உணர்ந்து பருவ காலங்களில் பரிணாமத்தைத் தூய தாக்கிக்கொள்வதே முக்கியம்.

எவருடைய உள்ளத்தில் உயர்வு எண்ணம் ஏற்படுகிறதோ எவருடைய மனதில் அறம் மேன்மையுற துவங்கிவிட்டதோ அவர்களுக்கு பருவம் தூண்டுதலாக அமைந்து அவர்களுடைய உள்ளத்தை மேலும் தூய்மைப் படுத்தி நற்பலனை அளிக்கும். சிரேயாம்சகுமாரர் உள்ளத்தில் ஏற்பட்ட தூய எண்ணம் அவருக்கு ஏற்றத்தை அளித்தது. அவர் உலகத்தாரால் போற்றப்பட்டவராகவும், முக்தியுலகை அடையும் பாக்கியத்தைப் பெற்றவராகவும், "அக்ஷய திருதியை" என்னும் பருவத்தைப் தோற்றுவித்தவராகவும்,

வானவர்களால் பாராட்டப்பட்டவராகவும், மனித சமூகத்திற்கு தானம் வழங்கும் வழி முறைகளைக் காட்டிய கர்த்தாவாகவும் ஆனார்.

அவர் காலத்தில் கோடிக் கணக்கான மனிதர்கள் இருந்தனர். அவர்களில் யாருக்குமே இந்த உயர்வு கிடைக்க வில்லை. இவருடைய உள்ளத்தில் ஏற்பட்ட தூய்மையும், முற்பிறவியில் செய்த நல்வினைப் பயனும், நற்காலமும் இவருக்குத்துணை புரிந்தன. தூய உணர்வு இல்லாத மக்களுக்கு இத்தகு நல்வாய்ப்பு எப்படிக் கிடைக்கக்கூடும்?

பருவ நாட்களில் உண்மையான பலனைப் பெற வேண்டுமென்றால் உள்ளத்தில் அற உணர்ச்சி ஏற்பட வேண்டும். தூய மனம் வேண்டும், இவை இல்லைஎனில் பருவமட்டு மென்ன? பருவத்திற்குக் காரணமாய் உள்ள மகாபுருஷரும்கூட யாதும் செய்ய இயலாது. மனிதன் அறவழி நடந்து ஆன்மீக பலம் பெற்று அழியா இன்பத்தை முத்தியைப் பெற முயல வேண்டும்.

## கால மாறுகை

**உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் இடமும் காலமும் எண்ணமும் நிமிஷந்தோறும் மாறுகை அடைகின்றன ஆனால் எப்பொருளும் தன் சுய நிலையில் நிரந்தரமான குணத்தை உடையதாக உள்ளன. ஆதலால் தான் அது முடிவும், துவக்கமும் அற்றதாகக் கருதப்படுகிறது. பொருள் மாறுகையினால் ஏற்படும் நிகழ்வு இருவகைப்படும்.**

புலப்படும் மாறுகை (ஸ்தூலபரிவர்த்தனை) புலப்படா மாறுகை (சூக்ஷ்ம பரிவர்த்தனை). என புலப்படா மாறுகை நம் கண்களுக்குத் தெரிவதில்லை ஆனால் அது நிரந்தரமாக செயல்பட்டுக் கொண்டே இருக்கும் காலம் வாய்ந்தபோது அது புலப்படும். எடுத்துக்காட்டாக ஒவ்வொரு நிமிஷத்திலும் வளர்ச்சி பெற்றுவரும் குழந்தையின் அறிவு வளர்ச்சி நுண்ணியதைக் காட்டும் கருவியின் வாயிலாகவும் கூட அதைப் பார்க்கமுடியாது. ஆனால் சில மாதங்கள் கடந்த பிறகு அதன் வளர்ச்சி நமக்கு நன்கு புலப்படுகிறது.

சில மாறுகை நம்முடைய புத்திக்கு அப்போதைக்கப்போதே காணப்படுவதும் உண்டு, மண்குடம் உடைந்து தூள் தூளாக ஆவதையும் காகிதம் எரிந்து சாம்பலாக மாறுவதையும் நம் கண்முன் காண்கிறோம். இத்தகு மாறுகையைப் பார்ப்பதற்கு அதிக நேரம் தேவைப்படுவதில்லை. இது புலப்படும் மாறுகையாகும் (ஸ்தூலபரிவர்த்தனை). இது போலவே உலகத்திலுள்ள எப்பொருளும் மாறுகை என்னும் சுழலுக்கு உட்படாமல் இல்லை. பொருள், இடம், காலம் , எண்ணம் யாவும் நாள் தோறும் மாறுகை இயல்பையுடையனவே.

இப்பொழுது காலத்தின் மாறுகையைப் பற்றி ஆராய்வோம் காலத்தின் மாறுகை இருவகைப் படும் (1) ஏறு காலம் (உத்சர்ப்பிணி) (2) இறங்குகாலம் (அவசர்ப்பிணி) என ஏறு காலத்தில் உள்ள உயிரினங்களின் உடலமைப்பு, பலம், வயது, ஆற்றில், நிலத்தின் செழிப்பு ஆகியவை படிப்படியாக வளர்ச்சியுற்று வளர்ந்துக்கொண்டே இருக்கும். வளருங் காலம் முடிவுற்ற பிறகு இறங்கும் காலம் ஆரம்பமாகும், இந்த காலத்தில் உள்ள உயிரினங்களின் உடலமைப்பு, பலம், வயது,

ஆற்றல், நிலத்தின் செழிப்பு, ஆகியவற்றில் படிப்படியாக வீழ்ச்சி ஏற்படும். வளர் காலத்திற்குப் பிறகு இறங்குங் காலமும் இறங்கு காலத்திற்குப் பிறகு வளர் காலமும் வளர்பிறை தேய்பிறை போன்று மாறி மாறி வந்துக்கொண்டே இருக்கும். இந்த மாறுகை நிரந்தரமாக இடைவிடாது செயல்பட்டுக் கொண்டே இருக்கும்.

வளருங் காலம், இறங்கு காலம், ஆகிய இவ்விரண்டு காலங்களில் ஒவ்வொன்றிக்கும் ஆறு ஆறு பிரிவுகள் உள்ளன. இப்பொழுது நிகழும் காலம் "அவசர்ப்பிணி" என்னும் இறங்குகாலமாகும் இதன் ஆறு பிரிவுகள் (1) சுஷம சுஷம) நன்நற்காலம் 2 (சுஷம) நற்காலம், 3 (சுஷம துஷம) நற்றீக் காலம் 4 (துஷம சுஷம) தீ நற்காலம் 5 (துஷம) தீக் காலம் 6 (துஷம துஷம) தீத்தீக்காலம், என்பன.

இப்பொழுது (அவசர்பிணி) இறங்கு காலப் பிரிவில் ஐந்தாவது காலமாகிய (துஷம) தீக்காலம் நிகழ்கிறது. முன்பு இந்த பரத க்ஷேத்திர மத்திம கண்டத்தில் மூன்றாவது பாகமாகிய (சுஷமதுஷம்) நற்தீக்காலம் நிகழ்ந்தபோது அக்காலத்தின் கடைசிப் பகுதியில் பகவான் விருஷபதேவர் தோன்றினார். அவர் அக்கால மக்கள் வாழ்வதற்கு வேண்டிய வழிவகைகளை வகுத்து, அவர்களுக்கு வாள், வரைவு, வாணிபம், உழவு, கல்வி, சிற்பம், ஆகிய ஆறு கலைகளையும் போதித்து இல்லறம் துறவறம் ஆகிய ஈரறங்களையும் அறிவுறுத்தி தானும் இல்லறத்தில் இருந்துகொண்டு உலகியல் இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும்போது இந்த இன்பம் எவ்வளவு தான் உயர்ந்த கட்டத்தையடைந்த போதிலும் இது மாறுகையடைந்து துன்பமாக மாறக்கூடியது .

இந்த சுகம் நிரந்தரமாக இருக்கக் கூடியது அல்ல. ஆன்மாவிற்கு அமைதி அளிக்கும் ஆற்றலும் இதனிடம் இல்லை. நிரந்தரமான இன்பமும் அமைதியும் அடைய ஆன்மீக குணத்தைப் பெற வேண்டும் என்று ஆழ்ந்துசிந்தனை செய்து ஆன்மா அமரத்வம் (முக்தி) அடைய துறவுப்பாதையில் செல்ல முற்பட்டார் அவர் மேலும் அவர் தியாகம், கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவைகளைக் கடைபிடித்து துறவு பூண்டு மிகத் தூயதும், உயர்ந்ததும், சிறந்ததும், அழியாததும், அறிவுமயமானதும், ஆகிய ஆன்மீக குணத்தையடைய முற்பட்டார். கடும் தவமியற்றி கொடிய வினைகளை வென்று ஆன்ம இயல்பைப் பெற ஆயத்தமானார்.

ஆன்ம ஒளியைப்பெற ஆயத்தமான விருஷபதேவர் தம் குடும்பத்தினருக்கும் பொதுமக்களுக்கும் அறவுரை வழங்கி ஆறுதல் கூறி திகம்பர தீக்ஷையைப் பெறப் புறப்பட்டார். தேவர்கள் சுதர்சனம் என்னும் பல்லக்கைக் கொண்டுவந்து வைத்தனர். அதில் அவர் அமர்ந்துவிட்டார். மாநில மன்னர்கள் அப்பல்லக்கை தம் தோள்களில் ஏந்தி ஏழு அடி நடந்தனர், அதன் பிறகு தேவர்கள் அப்பல்லக்கை வாங்கி தம் தோள்களில் வைத்துக் கொண்டு "சித்தார்த்த வனம்" என வழங்கும் தீக்ஷாவனம் அடைந்தனர். அப்பொழுது விருஷப தேவரின் குடும்பத்தினரும் நகர மக்களும் அவருடைய பிரிவினால் துயரமடைந்து கண்கலங்கினர். அப்பொழுது மோகனீய வினை என்னும் பகைவனை வெல்வதற்கு முற்பட்ட விருஷப தேவரைக் கண்டு மோகத்தின் படைகள் மிக்க துயர்படுவது போலவே காணப்பட்டது. நான்கு திசைகளிலும் விரக்தியின் நீர் ஊற்று பெருக்கெடுக்கலாயிற்று,

துறவுப் பல்லக்கு சித்தார்த்த வனம் அடைந்ததும் விருஷபதேவர் பல்லக்கிலிருந்து கீழே இறங்கிய காக்ஷி அவர் தேவலோகத்திலிருந்து இறங்குவது போல் இருந்தது. துறவு (முமுக்ஷு) ஆன்மாவாகிய விருஷபர் நலத்தைப் பெறுவதற் கென தபோவனத்தின் சூழ்நிலையில் இருந்து முறைப்படி தவமியற்றி அழியா இன்பத்தை வெகு விரைவில் பெறுவார். தன்னுடைய நன்மையையும் பிறர் நன்மையையும் பெறுவதற்கு தூய கண்ணாடியைப் போன்று தன்னுடைய வாழ்க்கையை அமைத்துக்கொள்வதே சாலச் சிறந்தது. மாசு படிந்த கண்ணாடியில் பார்ப்பவருடைய மாசற்ற முகமானது மாசு படிந்ததாகவே காணப்படும். அதனுடைய மாசுத்தன்மை மற்ற பொருட்களையும் கூட மாசு படுத்திவிடுவது போன்று மோகம் என்னும் மாசு படிந்த மனிதனுடைய மனம் மூவுலகத்திலுள்ள மாசற்ற பொருட்களைத் தூயதாகக் கருதாது என்பது உண்மை தத்துவம்.

விருஷபதேவர் இந்த உண்மை தத்துவங்களை உள்ளத்தில் உறுதியாகக் கொண்டு ஆன்மாவுடன் சேர்ந்துள்ள வினை மாசினைப் போக்கி ஆன்மாவை தூயதாக்கிக்கொள்ள ஆன்ம தியானம் அவசியமென்பதையும் அதற்கு மக்கள் சந்தடி அற்ற இடமே சிறந்தது என்பதையும் உணர்ந்தார். மக்கள் நடமாடும் இடத்தில் இருந்தால் மனதில் சலனம் ஏற்படும். சலனமடைந்த மனம் தவச்சக்தியை இழந்துவிடும், ஆதலால் மனப் போக்கை கட்டுப்படுத்தவும், மோகம் என்னும் வினையை வெல்லவும் சந்தடி அற்ற இடமே சிறந்தது என்பது உண்மை கருத்து.

விருஷபதேவருடைய எல்லா செயல்களும் சிறந்தவையே, அவருடைய தபோவனமும் கூட சிறந்ததாகவே இருந்தது.

பற்றற்ற தன்மையைக் கொண்ட அவருடைய மனம் ஆன்மாவை நோக்கலாயிற்று. புறப்பற்று ஆன்ம நன்மைக்கு மாறானது எனக் கருதி தனிமையே சாலச் சிறந்தது என சிந்திக்கத் துவங்கியது.

தீக்ஷைக்குப் புறப்படும் முன்பே அவர் தம் குடும்பத்தாரையும் மற்ற மக்களையும் அழைத்து ஆறுதல் கூறும் போதே "மக்களே!" துயரத்தை விடுங்கள், துன்பத்திற்கு இடம் கொடாதீர்கள்! துன்பம் வினைக்கட்டிற்குக் காரணம்,என்று கூறி பரதனுக்கு முடி சூட்டி மன்னனாக நியமித்துள்ளேன், அவன் உங்களை காப்பாற்று வான் என்று கூறி விடைபெற்று தவவனம் நோக்கிப் புறப்பட்டார். விருஷபருக்கு அப்போதே குடும்பப் பாசம் பறந்தோடிப் போய் விட்டது.

துறவைக் கைக்கொள்ள தன்னை ஆயத்தமாக்கிக்கொண்டார் அமரர்கள் "சந்திரகாந்தமணி" என்னும் பெரும் பாறையை அங்கு வைத்திருந்தனர். அதன் மீது மணம் கமழும் சந்தனம் மெழுகப்பட்டது. அதன் அருகில் அநேக மங்களகரமான பொருட்கள் வைக்கப்பட்டிருந்தன. விருஷபதேவர், தான் அணிந்திருந்த ஆடை ஆபரணங்களை அகற்றினார். அப்பொழுது அவர் தியாகமே உருவமாக காட்சி அளித்தார். அவருடைய தியாகத்திற்கு அவருடைய ஆன்மாவும், அமரர்களும் சித்த பகவானுமே சாட்சியாக இருந்தனர். இந்த மூவர் சாட்சியாக எல்லாப் பற்றுக்களையும் தியாகம் செய்து கிழக்கு திசை நோக்கி அமர்ந்து சித்த பகவானை வணங்கி ஐந்து முஷ்டி கொண்டு கேசலோசனம் செய்தார். (தலை முடிகளைக் களைந்தெறிந்தார்) ஐந்து முஷ்டி என்பது, ஐந்தாவது பிறவியாகிய முக்திக்குச்செல்ல பறப்பட்டதையும்,

பொருள், இடம், காலம், பிறவி, எண்ணம் என்கிற ஐந்து மாறுகையை வெல்வதற்கெனவும் ஐந்து முஷ்டி கேசலோசனம் செய்ததாகக் கருத்து விளங்கியது.

இப்பொழுது அவர் மௌன விரதம் ஏற்றுக்கொண்டார். உண்மையிலேலே மகாமுனி, மகா மௌனி, மகா த்யானி, மகாதம, மகாக்ஷய, மகாசீல, மகாயக்ஞ, மகாமக என்னும் அநேக திருப்பெயர்களைப் பெற்று மாபெரும் முனிவராகக் காட்சியளித்தார். இப்பொழுது அவர் ஏற்ற மௌனம் கேவலக்ஞானம் பெறும் வரை இருக்கும். அவருடைய மனம் புறச் செயல்களிலிருந்து ஆன்மீகச் செயலில் பற்றுக்கொண்டிருந்தது. புறப்பற்றினை வளர்க்கும் சூழ்நிலை வாய்ந்த போதும்கூட அவர் பற்றற்ற நிலையிலிருந்து நழுவமாட்டார். இதை அறிந்த அவர் ஆளுகையிற்குட்பட்ட நான்கு ஆயிரம் சிற்றரசர்களும் அவருடன் திகம்பரத்துறவை மேற்கொண்டனர் ஆனால் தவத்தில் அவர்களுக்கு உறுதி இல்லாமையால் பசி தாகம் ஆகியவைகளால் ஏற்படும் இன்னல்களை பொறுத்துக்கொள்ளும் ஆற்றலும், உடல் வலிமையும், தவ நம்பிக்கையும் இல்லாமையால் அவர்கள் அனைவரும் தவத்தைவிட்டு தவ ஒழுக்கத்திலிருந்து நழுவி பசியின் கொடுமையால் காய்கனிகளை புசிக்க ஆரம்பித்தனர். அவர்கள் தபோவனத்திலிருந்து வெளியேறுவதற்கு விருஷப தேவரிடம் விடைபெறச் சென்றனர். ஆனால் அவர் மௌனமாக இருந்ததினால் விடை பெற முடியாமல் காட்டிலேயே இருந்து கிழங்கு காய் கனிகளையே புசித்து காலம் கழித்து வந்தனர். இந்நிலை உள்ளவர்கள் மன உறுதி இல்லாதவர்கள். விருஷபதேவருக்கு அநேக இன்னல்கள்

நேர்ந்த போதிலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் மௌனமாக இருந்து ஆன்மீக சாதனை புரிவதிலேயே மன உறுதிகொண்டிருந்தார்.

## மௌனத்தின் சிறப்பு

மௌனம் ஏன்? அதை மேற்கொள்வதால் என்ன பலன்? இயற்கையாகக் கிடைத்த பேசும் தன்மையை ஏன் குறைக்கவேண்டும்? என்று சிலர் வினா எழுப்பலாம்.

இந்த வினாவிற்கு மகான் யோகி பூஜ்யபாதர் கூறும் விடையைக் காணலாம்.

"அன்னேப்யோ வாக் தத: ஸ்பந்தோ
மனஸ்ச்ச சித்த விப்ரமா :
பவதி தஸ்மாத் ஸம்ஸர்கம்
ஜநைர்யோகி தத : புத்யஜேத் (சமாதி சதகம்72)

(பொ-ள்) உலக சூழ்நிலைத் தொடர்பு ஏற்படும்போது வார்த்தை அளவை மீறுகிறது. அளவை மீறிய வார்த்தை பேசுவதால் மனோவிகல்பம் உண்டாகி அறிவு மயக்கம் ஏற்படுகிறது. ஆதலால் துறவறத்திற்கு மௌனம் அவசியம் தேவை

மனதை வெல்வது மிகக் கடினம். எள்ளளவு தடுமாற்றத் திற்குக் காரணம் வாய்த்தபோது மனம் விருப்பு என்னும் ஊஞ்சலில் ஆட ஆரம்பிக்கிறது. இதனால் தீவினைக்கட்டு

ஏற்படும். இது துன்பத்திற்குக் காரணம். ஆதலால்தான் யோக சாஸ்திரத்தின் உட்கருத்தினை உணர்ந்தவர்கள் மௌனத்திற்கு சிறப்புத் தருகின்றனர். மௌனம் ஏற்பதால் மனச்சஞ்சலம் குறைகிறது. ஆன்மாவில் மயங்கிக் கிடக்கும் அற்புதச் சக்திகள் வெளிப்படுகின்றன. முக்தியுலகை நாடிச் செல்லும் உயிரின் செயல் உலகியலான இன்பத்தில் சிக்குண்ட உயிர்களைக் காட்டிலும் தனிமையாகவும் சிறப்பு வாய்ந்தனவாகவும் அமைகிறது. விரும்பிய அலௌகீக இன்பத்தைப் பெறுவதற்கு துறவியர் எப்பொழுதும் மௌனம் மேற்கொள் வார்கள். உலகியல் வார்த்தைகள் அனைத்தும் பிறருக்காகவே உண்டாகியிருக்கின்றன. இத்தகு செயல் பிறரைச் சார்ந்தது. இது துறவியர்க்குத் அவஸ்யமில்லை. ஆன்ம ஒளி பெறுவதற்கு மௌனம் மேற்கொள்வது நல்லது. மனம், வாக்கு, காயம் ஆகியவற்றைக் கட்டுப்படுத்துவதற்கு "குப்தி" எனப் பெயர். மௌனம் ஒரு "குப்தி" ஆகும். மௌனத்தினால் வார்த்தை அடக்கப் படுகிறது. வார்த்தை அடக்கத்தினால் வினை ஊற்று தடைப்படுகிறது. இதனால் ஆன்மீக நன்மை ஏற்படுகிறது.

மௌனம் துறவியருக்கு மட்டும் கூறப்படவில்லை, இல்லறத்தாருக்கும் மௌனம் அவசியம். மௌனத்தினால் யாவும் சாதிக்க முடியும். மௌனமும் ஒரு விரதமாகும் இது இல்லறத்தாருக்கு இன்றியமையாதது.

விருஷபதேவர் தபோவனத்தில் இருந்து தூய்மையான எண்ணம் கொண்டு தியான நிலையை அடைந்தார். தீர்த்தங்கரநாம புண்யவினை இவருக்கு இருந்தமையால் தர்மதியானம் இவருக்கு எளிதாய் இருந்தது. சுக்லதியானம்

செய்வதே இவருடைய குறிக்கோள். தியானத்தில் பசி, தாகம், உடல் சோர்வு, குளிர், வெப்பம் ஆகியவைகளால் இவருக்கு எவ்வித இன்னலும் ஏற்படவில்லை. ஆத்ம தியானமே இவருடைய முக்கியச் செயலாக இருந்துவந்தது.

இவர் நின்ற வண்ணம் கடும் தவமியற்றி ஆறு மாதங்கள் கழிந்து விட்டன. தியானத்தில் ஏற்பட்ட ஆன்மீக இன்பத்தில் மூழ்கி இருந்ததினால் அவருக்கு பசி தாகம் இல்லை. அதனால் அவருக்கு ஆகாரம் ஏற்பது அவசியமும் இல்லை. இருந்தபோதிலும் தம் காலத்தில் தோன்றிய முனிவர்கள் ஆகாரம் ஏற்கும் வழியையும் இல்லறத்தார் ஆகாரம் அளிக்கும் விதி முறைகளையும் அறிந்துகொள்ள வேண்டுமென்கிற பெருநோக்கத்தோடு ஆகாரத்துற்குப் புறப்பட்டார். இதற்கு சர்யா மார்கம் எனப் பெயர்.

## வீதிதோறும் நிகழ்ந்த நிகழ்ச்சி

மதிய (பகல்) வேளை ஒரு மாபெரும் மனிதன் பிறந்த மேனியுடன் வீதியில் உலாவும் காட்சி பார்ப்பவர்களுக்கு வியப்பை உண்டாக்கியது. அவருக்கு காலில் பாத அணியும் இல்லை. நிழலுக்கு கையில் குடையும் இல்லை; ஆனால் கையில் கமண்டலமும் மயிற்பீலியும் மட்டும் அவர் இடக்கையில் இருந்தன; வலக்கை ஐந்து விரல்களும் தன்னுடைய வலது புஜத்தைத் தொட்டுக்கொண்டு செல்லும் காட்சியுடன் வீதிதோறும் உலாவிவரும் உத்தம புருஷன் யார்? அவர் யாராய் இருந்தால் என்ன? அவர் சாதாரண மனிதர் அல்ல, அவர் ஒப்பற்ற தியாகியாகத்தான் இருக்கவேண்டும் என்று அவரைக் கண்ட மக்கள் எல்லோரும் பேச ஆரம்பித்தனர்.

விருஷபதேவ மாமுனிவர் ஆகாரம் ஏற்க காட்டை விட்டு நாட்டிற்கு வந்த காட்சியைக் கண்ட மக்கள் இவருக்கு ஆகாரம் அளிக்கவேண்டிய விதிமுறையாகிய எதிர்கோடல் முதலிய நவபுண்ய (ஒன்பது வகை புண்ணியக்) கிரமங்களை அறியாமையால் இவரை வெவ்வேறு வகையில் வரவேற்கும் காட்சிகள் நிகழ்ந்தன.

ஆதிநாதர் பாதம்பட்ட இந்த பூமி தூய்மை அடைந்தது என்று நினைத்து மனமகிழ்ந்து ஆரவாரம் செய்யத்தொடங்கிய ஒருவருடைய சத்தத்தைக் கேட்டு அக்கம்பக்கத்திலிருந்து ஆண் பெண் யாவரும் ஓடோடிவந்து வாழ்வதற்கு வழி வகுத்துத்தந்த பிரம்மாவே ! மனித சமுதாயத்தை மேன்மையுச்செய்த மாமூர்த்தியே! உலக உயர்வை உணர்த்திய உத்தமரே! நீதியும் நேர்மையும்அறிவுறுத்திய அறிவழகரே! விவகாரத்தின் வழியினை விளக்கிய வித்தகரே! நிச்சயத்தின் நேர்மையைக் காட்டிய கர்தாவே! உயிர்ப் பொருளே முதலான ஒன்பது பொருட்களில் உயர்வை போதித்த போதகரே! இல்லறம் துறவறம் ஆகிய ஈரறங்களை அறிவித்த ஆசானே! பாமர மக்களுக்கு வாள், வ்ரைவு, வாணிபம், உழவு, கல்வி, சிற்பம் ஆகிய அறுவகைத் தொழில்களை பயிற்றுவித்த பரமகுருவே. மனித சமுதாயத்தை வாழவைத்த மாமன்னனே ! வருக ! வருக !என்று எல்லோரும் வரவேற்றனர்.

சிலர் தம் கரங்களைக் கூப்பி தம் தலை மீது வைத்துக் கொண்டு. "ஆ! ஏழை எளியோருக்கு நல்வழி காட்டிய நல்லாசிரியரே! நீங்கள் எங்கள் மீது கருணை வைத்து மறுபடியும் இந்நகரம் வந்துள்ளீர்கள், நாங்கள் வாழ்வதற்கு

வேண்டிய வழிவகைகளை நீங்கள் போதிக்காமல் இருந்தால் எங்கள் நிலை என்ன ஆகி இருக்குமோ? உண்மையில் எங்கள் உயிர் காத்த உத்தமர் நீங்கள். ஞாயிறும் திங்களும் உள்ளவரை இம்மனித சமூகம் உங்கள் உதவியை மறக்காது என்று பல வகையாகப் போற்றி புகழ்ந்து ஆதிநாத மாமுனிவரை வரவேற்றனர். ஆனால் அம் மாமுனிவரோ கம்பீரமாகவும் அமைதியுடனும் இருந்து மக்களுடைய பாராட்டுதலைக் கேட்டு எள்ளளவும் சலனமின்றி மௌனமாவே வீடு வீடாக சென்று ஆகாரம் அளிக்கும் வழி அறிந்து மக்கள் முறைப்படி ஆகாரத்திற்கு அழைக் கின்றார்களா என்பதையே கண்ணுற்றார்.

இவர் மௌனமாக செல்வதைக் கண்ட ஒருவர். "ஐயா ! நீங்கள் எங்கள் குலவிளக்கு ! என்னிடம் உள்ள பொருட்கள் யாவும் உங்களுடையது, என்னுடைய உயிரும் உடலும் கூட உங்களுடையவையாக இருக்கும்போது நான் உங்களுக்கு கொடுக்க வேண்டியது என்னதான் இருக்கின்றன? நீங்கள் காட்டிலிருந்து நடந்தே வந்துள்ளீர்கள் ! நீங்கள் களைத்து இருக்கலாம். எங்கள் குதிரை லாயத்தில் சிங்காரிக்கப்பட்ட குதிரை உள்ளது. அது எல்லா இலட்சணங்களையும் ஒருங்கே அமைந்த, உயர்ந்த, உத்தம, இனத்தைச் சார்ந்தது அதை நீங்கள் ஏற்றுக்கொண்டு அதன் மீது ஏறிச்செல்லுங்கள்" என்றார்.

மற்றொருவன் "சுவாமி ! என்னிடம் உயரமான மேன்மையான இனத்தைச் சார்ந்த யானைகள் உள்ளன. நீங்கள் யானைத் தொழுவத்திற்கு வாருங்கள், அங்குள்ள யானைகளில் எது உங்களுக்கு பிடித்தமோ அதை நீங்கள் ஏற்றுக்

கொள்ளுங்கள், நீங்கள் நடந்தே செல்வது எங்களுக்கு நல்லதாகத் தோன்றவில்லை. மேலும் உங்களுக்கு என்ன தேவையோ அதை என்னிடமிருந்து ஏற்றுக்கொள்ளுங்கள் நான் சொல்வது தவறாக இருந்தால் என்னை மன்னித்து விடுங்கள்" என்றான்.

மூன்றவதாக ஒருவன், "உலக இரட்கரே! நாங்கள் அறிவற்றவர்கள், கொடும் சூரிய வெப்பத்தினாலும், கனத்த மழையினாலும் அல்லல் பட்டுக்கொண்டிருந்த எங்களுக்கு வீடு கட்டும் கலையைக் கற்பித்து வாழும் வழி முறைகளையும் காட்டிக் கொடுத்தீர்கள்! எங்கள் உள்ளத்தில் கட்டிடக் கற்பனையே இல்லை. திக்கற்றவராக இருந்த எங்களுக்கு நீங்கள் தான் கட்டிடக் கலைகளைக் கற்பித்து தந்தீர்கள், பிரபுவே ! என்னுடைய இந்த எழிலகம் உங்களுடையதே! இதை நீங்கள் ஏற்றுக்கொண்டு இதில் வாசம் செய்யுங்கள்" என்றான்.

நான்காவதாக ஒருவன், வணக்கத்திற்குரியவரே! இல்லத் தரசிதான் இல்லத்திற்கு அழகு, இல்லத்தரசி இல்லாமல் எந்த எழிலகம்தான் அழகைத் தரும்? எல்லா குணங்களும் அழகும் ஒளி தரும் மேனியையும் உடைய என்னுடைய மகள் மங்கையர் குலத்திற்கே மதிப்புற்றவளாக இருக்கிறாள். சுவாமியே ! நீங்கள் இவளை மணம் புரிந்துகொண்டு இல்லற வாழ்க்கை நடத்துங்கள். நீங்கள் தனிமையாக உலாவுவதைக்கண்டு எங்கள் உள்ளம் வருந்துகிறது. நான் மிகச் சிறியவன். பெரிய வார்த்தைகளைக் கூறுகின்றேன். என்னை மன்னித்து விடுங்கள், என்னுடைய ஒரே மகளை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள் " என்றான்.

ஐந்தாவதாக ஒருவன், நவரத்தினம், கோமேதகம், புஷ்பராகம், வைடூரியம், மாணிக்கம், முத்து ஆகிய விலையுயர்ந்த பொருட்கள் நிரம்பிய தட்டு ஒன்றைக் கையில் ஏந்திக்கொண்டு தன்னுடைய வீட்டின் வாயிற் பகுதியில் நின்றுகொண்டிருந்தான். ஆதிதேவர் அவர் வீட்டு வாயிற் பகுதிக்கு வந்தபோது, பிரபுவே! வருக! வருக! நீங்கள் என்னுடைய மனக்கோயிலில் வாசம் செய்யும் மாமகன் ! நான் எளிய குடும்பத்தைச் சார்ந் தவன், உங்கள் பணியாளனும் கூட!, உங்களுக்கு நான் ஆரத்தி எடுக்கின்றேன். நீங்கள் இந்த தட்டில் நிரம்பியுள்ள விலையுயர்ந்த பொருட்களை ஏற்றுக்கொள்ளுங்கள். இதுவே என் அன்புக் காணிக்கை" என்றான்.

ஆறவதாக ஒருவன், நன்கு மலர்ந்த நறுமணமுள்ள மலர்களால் தொடுத்த மாலை ஒன்றை தன் கையில் ஏந்திக் கொண்டு "சுவாமி !நீங்கள் அமரர்களாலும் மனிதர்களாலும் பூஜிக்கப்படுபவர். உலகத்திலுள்ள உயிரினங்கள் யாவும் உங்கள் பாதாரவிந்தங்களில் விழுந்து வணங்குகின்றன. உங்களைக் கண்டபோதே மக்கள் பெற்ற மகிழ்ச்சிக்கு அளவே இல்லை? ஹே பகவானே! நீங்கள் எனக்கு அன்னையும் பிதாவும் அனைத்தும் ஆவீர், நீங்கள் என்மீது கருணை கூர்ந்து இந்த மலர் மாலையை ஏற்றுக்கொள்ளுங்கள், இதுவே என்னுடைய பணிவான அன்பளிப்பு" என்றான்.

விருஷபதேவர் இப்பொழுது எல்லாவற்றையும் தியாகம் செய்து துறவு பூண்டு முக்தியுலகையடைவதற்கு முற்பட்டு விட்டார். அகப்பற்று, புறப்பற்று, யாவும் இவரிடம் இல்லை இவருக்கு யானையும், குதிரையும், கன்னிப்பெண் போன்ற

உயிர்ப்பொருட்களும், கோமேதகம், வைடூரியம், முத்து, மலர் மாலை, வீடு வாசல் போன்ற உயிரற்ற பொருட்களும் தேவை இல்லை. அவர் தொழில், மற்றும் பொருட்பற்று (பரிகிரகம்) யாவும் துறந்தவர். பரிகிருகத்திற்கென உபதேசத்தை இவர் செய்ததும் இல்லை. பிறரைச் செய்யும்படி தூண்டுவதும் இல்லை, இந்நிலையில் அவர் சமைத்து உண்ணும் செயலையும் செய்வதற்கில்லை. இல்லறத்தார் தனக்கென சமைத்த தூய உணவை அவர் ஏற்பார்.காய்ச்சிய நீரைத்தான் பருகுவார். இவை எல்லாம் துறவியர்களுக்கென்றே உள்ள விதிமுறைகள். அப்பொழுது இருந்த மக்கள் துறவியருக்கு ஆகாரம் கொடுக்கும் விதிமுறைகள் அறிந்தவர்கள் அல்லர். விருஷபதேவருக்கு அந்தராயம் என்னும் வினையின் விளைவும் இருந்தது, அதனால் ஆகாரத்திற்கு வேண்டிய அகக் காரணம் புறக்காரணம் சாதகமாக இருந்தபோதிலும் கூட இவர் கிராமம் நகரம் ஆகிய எல்லா இடங்களிலும் திரிந்தபோதிலும் இவருக்கு அந்தராய வினை துய்ப்பு தடுப்புவினை காரணமாக ஆகாரம் கிடைக்கவில்லை, (இவர் அயனோபவாஸி ஆனதால்) மேலும் ஆறு மாத காலம் மௌனமும் உபவாசமும் மேற்கொண்டு காட்டிற்குச் சென்று தவம் புரியலானார்.

## சிரேயாம்சர் கண்ட கனவுகளும் அதன் பலனும்

குருஜாங்கல நாட்டைச் சார்ந்த அஸ்திரநாபுரம் என்னும் நகரத்தில் குரு வம்சத்தில் உதித்த சோமப்பிரப மன்னனுடைய இளைய சகோதரர் ஸ்ரேயாம்சகுமாரர் என்பவர். இவர் ஒரு

நாள் இரவு கடைசி ஜாமத்தில் கீழ்க்கண்ட கனவுகளைக் கண்டார்.

1. மிகவும் உயரமான பொண்ணிற மேருமலை.

2. பல அணிகலன்கள் தொங்கும் கிளைகளையுடைய கற்பக விருக்ஷம்.

3. மாலை வேளை ஞாயிறு ஒளி போன்று மஞ்சளும் சிவப்பு நிறமும் உள்ள பிடறியுடன் கொண்ட கழுத்தையுடைய சிங்கம்.

4. கிளறிய மண் படிந்த கொம்புகளையுடைய எருது.

5. பார்ப்பவர்கள் கண்களைக் கவரும் வண்ணம் காட்சி யளிக்கும் சூரிய சந்திரன்.

6. பெரிய பெரிய அலைகளையும் இரத்தினங்களையும் உடைய கடல்.

7. எட்டு (அஷ்ட) மங்களகரமான பொருட்களை தம் கைகளில் ஏந்திக்கொண்டு நிற்கின்ற வியந்திர தேவர்கள் சிலை.

இந்த ஏழு கனவுகளையும் கண்ட ஸ்ரேயாம்ச குமாரருக்கு வியப்பு ஏற்பட்டது. இந்த கனவுகளின் பலன்களை அறிந்துகொள்ள மறுநாள் தனது சகோதரராகிய சோமபிரப மன்னனிடம் சென்று தான் கண்ட கனவுகளைப்பற்றி

கூறினார். அப்பொழுது அவருடன் அமர்ந்திருந்த இராஜபுரோகிதர் ஒருவர் இக்கனவுகளைக் கேட்டு பலன்களைக்கூறலானார்.

இளவரசே ! நீங்கள் கண்ட கனவுகள் எதிர்காலத்தில் நிகழ இருக்கும் சிறந்த நிகழ்ச்சியைக் குறிக்கின்றன. மேரு மலையைக் கண்டதினால் மேருமலை போன்று அதிசய உயரமானவரும் மேருமலையில் அபிஷேகம் செய்யப் பட்டவராகிய ஒரு மாமனிதர் உங்கள் இல்லத்திற்கு வரப்போகிறார் என்பதை அறிவுறுத்துகிறது. மற்ற கனவுகளும் வரப்போகும் மாமனிதரின் குணாதிசயங்களை அறிவிக்கின்றன என்றார். இதைக் கேட்ட இரு சகோதரர்களும் மனமகிழ்ந்து நடக்க இருக்கும் நிகழ்ச்சி எதுவாக இருக்கும் என்று தமக்குள் பேசிக்கொண்டு கனவுகளின் பலன்களைப் பற்றி சிந்திக்கலாயினர்.

வைசாக மாதம் நடுப்பகல் வேளை பகலவன் கொடும் வெய்யிலைப் பரப்பி நிலத்தை வெப்பப்படுத்தியுள்ளான். வரண்ட நிலத்திலிருந்து பறந்து வரும் தூசு பாதையில் உள்ள மரம் செடி கொடிகளையும் நடமாடும் உயிரினங்களையும் மறைத்துள்ளது. ஏழை எளியவர்கூட இந்த இயற்கைக் கொடுமைக்கு ஆளாகாமல் தம் தம் வீட்டில் இருந்து கொண்டு நிழலின் இன்பத்தை நுகர்கின்றனர். வீடுவாசல் இல்லாத

---

1. மேரு தரதர்நாத்தேவோ யோமேருரிவ சுந்நர :
   மேரௌ ப்ராப்தாபிஷேக : சக்ருஹமேஷ்யதி : - ஸ்புடம்

மக்களும் கூட அடர்ந்த இலைகள் நிரம்பிய மரத்தின் நிழலில் தங்கியும் உறங்கிக்கொண்டும் தம் விதிப்பயனை அனுபவித்துக்கொண்டிருந்தனர். கால் நடைகளும் கூட கொடும் வெய்யிலில் இங்குமங்கும் திரிவதற்கு அஞ்சுகின்றன. எங்கு பார்த்தாலும் பாதைகள் சந்தடியற்றும் மக்கள் நடமாட்டமும் இன்றி வெறிச்சென்று காட்சியளிக் கின்றன.

அஸ்தினாபுரத்து மன்னனாகிய சோமபிரபன் வைசாக மாதம் வளர்பிறை மூன்றாம் நாள் (திருதியை திதியன்று) தன்னுடைய குடும்பத்தாருடன் உயர்ந்த மாளிகை மீது அமர்ந்துகொண்டு இளைய சகோதரன் கண்ட ஸ்வப்பனங்க ளைப்பற்றி உரையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது சித்தார்தன் என்கிற வாயிற்காப்பாளன் வந்து அவர்களிடம் மங்களகரமான ஓர் நற்செய்தியைக் கூறினான். உடனே ஸ்ரேயாம்சகுமாரர் பார்வை இராஜ வீதியில் பட்டது, அங்கு கம்பீரமான தோற்றமும் ஆன்மீக இன்பத்தைப் பெறுவதற்கு வேண்டிய சாதனையில் ஈடுபாடும் கொண்ட நற்செயலின் சாயலை யுடைய ஒளிமயமான முகமும் தவத்தின் தன்னிறைவும் ஒருங்கே அமைந்த விருஷபதேவர் வருவதை அவர் கண்டார்.

விருஷபதேவ மாமுனிவர் ஆகாரம் ஏற்பதற்கு வருகிறார்; அவர் துறவும் மௌனமும் மேற்கொண்டு ஒரு ஆண்டு காலம் கழிந்து விட்டது. அவரைக்கண்ட ஸ்ரேயாம்சகுமாரர் மிக மகிழ்ச்சி கொண்டார். அவர் மனதில் அறம் தோன்றிது. அவருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியால் மயிர்க்கூச்சல் ஏற்பட்டது

ஒவ்வொரு நரம்பிலும் ஆனந்தக் குருதி பாய்ந்தது. அளவிலாத ஆனந்தத்தினால் அவர் முகம் மலர்ந்த மலர் போன்று காட்சியளித்தது. விருஷப தேவரைக் கண்டவுடனே அவர் தன்னுடைய இருக்கையிலிருந்து எழுந்து ஏழு அடி நடந்து வீதியில் வரும் முனிவரை நோக்கி வணங்கினார்.

விருஷபதேவர் அக்காலத்தில் தோன்றிய யுகபுருஷர், அவரைக் கண்டு யார்தான் மகிழமாட்டார்கள்? அவருடைய திருவடிகளில் விழுந்து அவரை வணங்காதவர் யார் உளர்? மக்கள் தங்களுடைய மனதில் தோன்றிய பக்தியினைக் காட்ட மணம் கமழும் மலர்ந்த மாமலர்களைக் கொண்டு வந்து அவருடைய திருவடிகளில் சாற்றி வணங்குவதை ஸ்ரேயாம்ச குமாரர் கண்டார். அவர் கண்ட புதிய தோற்றமும் வியப்பு மிக்க காட்சியும். அவருக்கு அதிசயத்தை உண்டாக்கின. இதற்கு முன்பு இப்பிறவியில் அவர் இத்தகு தோற்றத்தைக் கண்டதே இல்லை. இமைகொட்டாது அம்மாமுனிவரைப் பார்த்துக் கொண்டே இருந்த அவருக்கு முற்பிறவி நினைவு வந்தது விதேக க்ஷேத்திரத்தில் இந்த விருஷபதேவர் ஆன்மா

---

மின் விளக்குக் கம்பங்கள் வரிசையாக எவ்வளவு தூரம் இருந்த போதிலும் ஒரு இடத்தில் அதன் பட்டனை அழுத்தியதுமே மின் சக்தி அத்தனைக் கம்பத்திலுள்ள விளக்குகளையும் ஒன்றன்பின் ஒன்றாக தொட்டுக்கொண்டு எல்லா கம்பங்களிலுள்ள விளக்கை ஒளிக்கச் செய்கிறது. எல்லா கம்பங்களையும் மின்சாரம் கடக்கும் காலத்தை நம்மால் அறிய முடிவதில்லையோ அது போல நினைவு ஆற்றல் எத்தனை பிறவிகளைத் தொடுகிறது எவ்வளவு நேரத்தில் தொடுகிறது என்பதைக் கூற முடியாது.

வஜ்ஜிரஜங்க மன்னனாக இருந்தபோது நான் அவருடைய துணைவியாராக இருந்தேன். ஸ்ரீமதி என்கிற பெயர் எனக்கு இருந்தது. அப்பொழுது நாங்கள் இருவரும் இரண்டு சாரண முனிபுங்கவர்களுக்கு ஆகாரதானம் அளித்தோம் என்கிற நினைவுகள் வந்தன.

விருஷபதேவரைக் கண்டதுமே முற்பிறவி நினைவு பெற்ற சிரேயாம்ச குமாரர் தான் கண்ட கனவின் பலனை உணர்ந்தார் விருஷபதேவர் மேருமலையைப் போன்று உயரமாக உள்ளார். புரோகிதன் கூறியவாறு இவர் மேருமலையில் அபிஷேகம் செய்யப்பட்டவரே யாவார், தான் கண்ட கனவும் புரோகிதன் கூறிய பலனும் உன்மையாயிற்று என்று கருதினார்.

ஸ்ரேயாம்சகுமாரர் பரதக்ஷேத்திரத்தில் இருந்து கொண்டே தன்னுடைய முற்பிறவியில் விதேக க்ஷேத்திரத்தில் தனக்கு ஏற்பட்ட நிகழ்ச்சியை நினைவு கூர்ந்தார். (சம்யமம்) கட்டுப்பாடு. அறப்பற்று, நற்பழக்கம் ஆகியவை அவரிடம் இருந்தன அதனால் தான் அவருக்கு இந்த ஆற்றல் ஏற்பட்டது. மகாவிதேக க்ஷேத்திலிருந்து இப்பொழுது தான் இங்கு வந்து இறங்கியதுபோல் அவருக்குத் தோன்றியது.

---

மதிஞானத்தின் பிரிவுகள் பல உள்ளன. அதில் முற்பிறவி நினைவு ஞானமும் ஒன்று. இதற்கு முன்பு எடுத்த பிறவிகளில் நிகழ்ந்த நிகழ்ச்சி. இப்பொழுது நினைவிற்கு வருவதே முற்பிறவி நினைவு என்பதாகும் இதற்கு "ஜாதிஸ்மரனம்" என்று பெயர். இது ஐந்து அறிவுள்ள உயிர்களுக்கே ஏற்படும். அதுவும் கூட மனதுடன் கூடிய ஐம்புலன்களைப் படைத்த உயிராக இருக்கவேண்டும்.

ஆறு மாதங்களுக்கு முன்பு விருஷபதேவர் ஆகாரம் ஏற்க வந்தபோது மக்கள் அவரை உலகத்தந்தை எனவும் மாமனிதர் எனவும் நினைத்து அவருக்கு மதிப்பு மிக்க பெரும் பொருட்களையே அன்பளிப்பாக அளித்த காலம் அது. அப்பொழுது துறவியருக்கு ஆகாரம் அளிக்கும் விதிமுறைத் தெரியாதவர்களாக இருந்தனர். மேலோருக்கு மேன்மையான பொருளையே கொடுக்க வேண்டும் என்பதையே அவர்கள் உணர்ந்து இருந்தனர், அன்னம், நீர் பால், பழம் ஆகிய எளிய

---

முற்பிறவி நினைவாற்றால் ஓர் சிறந்த ஆற்றல் ஆகும். அமெரிக்கா இந்த பாரத நாட்டிற்கு நேர் கீழ் பாகத்தில் உள்ளது என்று வைத்துக்கொள்ளுங்கள் இவ்விரண்டு நாட்டிற்கும் இடையில் உள்ள தூரமும் நிலத்தின் கன அளவும் இலட்சக்கணக்கான கிலோமீட்டர் இருந்தபோதிலும் கூட அமெரிக்காவைப் பார்த்துவிட்டு பாரதத்தில் வந்து வசிக்கின்றவர் தாங்கள் அமெரிக்காவில் கண்ட நிகழ்ச்சிகள் யாவும் நினைவிற்கு வருகிறது, அவர்கள் மதி ஞானத்தின் மூலம் இதை நினைவு படுத்துகின்றனர், காலமும் இடமும் மாறுபட்டு அளவு கடந்த எல்லைக்கு அப்பாற்பட்டிருந்த போதிலும் மனிதன் முன்பு கண்ட நிகழ்ச்சிகளை நினைவிற்குக் கொண்டு வருகிறான் .இது மதிக்ஞானத்தின் வழி செயல்படுகிறது. பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சிகள் நினைவிற்கு வருவதுபோல் அளவு கடந்த ஆண்டுகளில் நிகழ்ந்ததும் பல பிறவிகளில் நடந்ததும் அறியப்படுகிறது. ஆனால் இடைவெளியில் எடுத்த பிறவிகளில் மனம் என்னும் நுண்கருவி விடுபட்டு இருக்கக் கூடாது. (ஆகம வார்த்தைப்படி "அசஞ்சி" யாக பிறந்து இருக்கக் கூடாது).

பொருளை அவருக்குக் கொடுப்பது பக்திக்கும் மரியாதைக்கும் முறண்பட்ட செயல் எனவும் கருதினர். ஆனால் விருஷப தேவருக்கு அப்பொழுது மக்கள் கொடுத்த எந்த பொருட்களும் தேவை இல்லை. விதிமுறைப்படி அளிக்கும் ஆகாரமே அவருக்கு உகந்தது.அதற்காகவே அவர் வீதி வழியாகச் சென்றார்.

அப்பொழுது நடந்த நிகழ்ச்சிக்கும் இப்பொழுது நிகழும் நிகழ்ச்சிக்கும் எவ்வளவோ வேறுபாடு காணப்படுகிறது. விருஷபதேவர் வருகையைக் கண்ட சோமப்பிரபமன்னனும், ஸ்ரேயாம்ச குமாரரும் சேர்ந்து அரச மாளிகையிலிருந்து வெளிவந்து தம் கையில் பூர்ண கும்பத்தை வைத்துக்கொண்டு சுவாமி! இங்கு எழுந்தருள்க! எழுந்தருள்க! (அத்ரதிஷ்டதிஷ்ட) என்று மனமகிழ்ந்து கூறினர். பிறகு (ஒன்பது) நவபுண்ணியக்கிரமத்தோடு

---

எடுத்துக் காட்டாக ஓர் உயிர் மனம் உள்ளதாக இருந்து இறந்த பிறகு மனம் இல்லாத (அசஞ்சி) உயிராகப் பிறந்தால் அதற்கு முற் பிறவி நினைவு ஏற்படாது. இங்கு இடத்தின் மாறுகை இல்லை. காலம் சிறிதளவு மாற்றம் உண்டு ஆனால் அறிவதற்குத் தகுந்த மனம் இல்லை. ஆதாலல் அதற்கு முற்பிறவி நினைவாற்றல் ஏற்படவாய்ப்பு இல்லை. மனம் என்னும் நுண்கருவி படைத்த ஸஞ்சி ஜீவன் இறந்து அடுத்து பிறவுயில் ஸம்ஞ்சி யாகவே-மனம் உள்ள ஜீவனாகவே பிறந்தால் அளவு கடந்த ஆண்டுகள், அளவு கடந்த கிலோமீட்டர் தூரம் கடந்த போதிலும் அதற்கு முற்பிறவி நினைவு ஆற்றல் ஏற்படுகிறது இத்தகு ஆற்றல் படைத்த உயிர்களை இன்றும் காண்கிறோம்.

அவருக்கு ஆகாரம் அளிக்க ஆயத்தமாயினர். ஆகாரம் அளிப்பவர்களுக்கு ஏழு குணங்கள் இருக்க வேண்டியது அவசியமாகும். அவை 1. நல் நம்பிக்கை 2. சக்தி 3. பக்தி 4. ஞானம் (அறிவு) 5.பற்றற்ற மனம் 6. பொறுமை 7. தியாகம், இவை ஏழும் சிரேயாம்சகுமாரிடம் இருந்தன. அப்பொழுது விருஷ பிரபுவின் அருகில் நின்ற இரு சகோதரர்களும் சௌதர்ம ஈசான தேவலோகத்து இந்திரனைப்போல் காணப்பட்டனர்.

அப்பொழுது அவர்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைப் பற்றி எவராலும் விளக்க முடியாது. பகவான் விருஷபதேவர் ஆகாரம் ஏற்ற செய்தியை அறிந்த மக்கள் அனைவரும் அளவு கடந்த ஆனந்தத்தில் மூழ்கினர். கருப்பஞ்சாறு ஒப்பற்ற உயர்ந்த சிறந்த பொருள், அப்பொருளை ஆகாரமாக அளித்ததைக் கண்ட அமரர்கள் ஸ்ரேயாம்ச குமாரைப்பாராட்டி வாழ்த்தி "அவருக்கு தான தீர்த்தகரர்" என சிறப்புப்பெயர் வழங்கி அவர் இல்லத்தில் மலர்மாரி, மணிமாரி பொழிந்து, மனம் கமழும் குளிர்ந்த காற்றை வீசி, அமர ஒலி பரப்பினர். ஸ்ரேயாம்ச குமாரர் வழங்கிய தானத்தின் சிறப்பைக் கேட்ட பரத மாமன்னன் ஸ்ரேயாம்ச குமாரர் இல்லத்திற்கு வந்து அவரை புகழ்ந்து பாராட்டி "மகா தானபதி" என்கிற சிறப்புப் பெயரை அவருக்கு வழங்கிச் சென்றார்.

---

1. பர்யந்த வர்த்தி நோமத்யே தயோர் பர்த்தாஸ்ம ராஜதே
   மகாமேருரிவோத்பூதோ மந்யே நிஷத நீலயோ : (20-77)

2. ஸ்ரீமான் சோமப்ரபோ நமா லட்மீமத்யாச சாதரம்
   ரசமிக்ஷோரதாத் ப்ராசுமுத்தாநி க்ருதபாணயே :

   மகாபுராணம் பருவம் 20 சுலோகம் 100.

தானத்தை ஏற்பவர் பாத்திரம் எனப்படுவர். இங்கு பாத்திரம், தானம் வழங்கும் விதிமுறை, தானம் வழங்கும் பொருள், தானம் வழங்குபவர் ஆகிய நான்கு பொருட்களும் ஒப்பற்றவைகளாக இருந்தன. மூவுலகிற்கும் நாயகனாக விளங்கும் பகவான் விருஷபதேவர் ஓர் ஆண்டு காலம் உபவாசம் இருந்தபோது கர்ம பூமி துவங்கியகாலத்தில் முதன் முதலில் முனிவரின் தவ வாழ்வுக்கு அனுகூலமான பொருளைத் தானம் கொடுத்ததின் பலனால் ஸ்ரேயாம்ச குமாரருக்கு "தான தீர்த்தகரர்" என்கிற பதவி கிடைத்தது. அந்த தானம் அக்ஷய பலனை அதாவது அழியாப் பலனைக் கொடுக்கக்கூடியதாக அமைந்த காரணத்தால் அந்த நாளுக்கு அக்ஷயதிருதியை எனப் பெயர் வழங்கலாயிற்று. ஸ்ரேயாம் சகுமாரர் அன்று முதல் தான சிரோமணி முதலான சிறப்புப் பெயர்களைப் பெற்றார். இத்தகு சிறந்த செயலால் தான்

---

சோமபிரப மன்னனும் ஸ்ரேயாம்ச குமாரரும் நின்றுக் கொண்டிருக்க அவர்கள் இருவருக்கும் இடையில் ஆகாரம் ஏற்க நின்ற நிலையில் எழுந்தருளிய விருஷபதேவர் நிஷத நீலபர்வதங்களுக்கிடையில் சுமேரு பர்வதம் நிற்பது போன்று இருந்தது.

ஸ்ரேயாம்ச குமாரர் தன்னுடைய சகோதரர் சோமப்பிரப மன்னனுடனும் சகோதருடைய மனைவி லட்சுமிமதியுடன் நின்றுகொண்டு விருஷபதேவருக்கு ஆகாரம் அளிக்கத் துவங்கினர். தம் இரண்டு உள்ளங்கைகளை இணைத்து கிண்ணம்போல் வைத்திருந்த விருஷபதேவருக்கு அவர்கள் கருப்பஞ்சாற்றினை கொடுக்க, அதை அவர் ஏற்றுப் பருகி பாரணை செய்தார்.

அவருக்கு நல்வினைக்கட்டு (புண்ணிய கர்ம பந்தம்) ஏற்பட்டது.

விருஷபதேவர் பிறந்தபோதே மதி, சுருதி, அவதி என்னும் மூன்று ஞானங்களை உடையவராக இருந்தார். துறவுபூண்டு தவம்புரிய ஆரம்பித்த உடனே அவருக்கு மனப்பர்யயஞானம் என்னும் நான்காவது ஞானமும் உண்டாயிற்று. அவர் நான்கு ஞானங்களையுடையவராக இருந்ததால். தன்னுடைய ஞானத்தால் கருப்பஞ்சாறு தூயது, மாசற்றது, ஏற்கத்தக்கது என அறிந்து அதை ஏற்று பாரணை செய்தார். அந்த நாள்

---

ஒன்பது புண்ணியக் கிரமங்களாவன

1. சுவாமி திஷ்ட திஷ்ட என்று கூறி முனிவரை எழுந்தருள்க ! எழுந்தருள்க ! வீட்டிற்குள் வாருங்கள் என அழைப்பது.
2. அமருவதற்கு உயர்ந்த ஆசனம் அளிப்பது.
3. அவர் திருவடிகளை வெந்நீரினால் கழுவுதல்.
4. அவர் பெயரைக் கூறி அர்ச்சனை செய்தல்.
5. முண்டி இட்டு வணங்குதல்.
6. மனத் தூய்மை கொண்டேன்.
7. வசனத் தூய்மை கொண்டேன்.
8. சரீரத் தூய்மைகொண்டேன்.
9. ஆகாரம் தூய்மையானது எனக் கூறுதல்
   இதற்கு நவதா பக்தி எனப் பெயர்.

உலகிலேயே தானவழிதுவங்கிய முதல் நாளாகவும், புனித நாளாகவும் கருதப்படுகிறது. உலகத்திற்கு மாபெரும் சிறந்த ஒப்பற்ற தானவழியைக் காட்டிய ஸ்ரேயாம்சகுமாரும் சிறந்தவரே. விருஷப தேவருக்கு அன்று விதிமுறைப்படி ஆகாரம் வழங்கியது எளிய செயல் அல்ல.

அக்ஷயதிருதியை பருவ நாளின் சிறப்பு பாரத முழுதும் பரவியுள்ளது. இது தானதர்மத்தின் துவக்க நாள் ஆதலால் இது மிக முக்கிய புனித நாளாகும். குடும்பத்தைத் தியாகம் செய்து ஒரே நிலையான எண்ணத்துடன் ஆன்மீக சாதனையில் ஈடுபாடு கொண்டுள்ளவரும், உலகத்தில் ஆன்மீக ஒளியினைப் பெறும் வழிகளைக் காட்டியவரும், உலக நன்மைக்காகவே தன்னுடைய எல்லா சக்திகளையும் அர்ப்பணித்தவரும் ஆரம்பம் பரிகிருகம், (பொருட்பற்று) தொழில் ஆகியவைகளை முழுதளவும் விட்டவரும் ஆகிய துறவியருக்கு ஆகாரம் அளிப்பது இல்லத்தாருடைய கடமையாகும். செழிப்பு வாய்ந்த நிலத்தில் விதைத்த வித்துமுளைத்து நன்கு வளர்ந்து நற்பலனைத் தருவது போன்று துறவியர் போன்ற உத்தமபாத்திரத்திற்கு அளித்த தானம் ஒப்பற்ற உயர்ந்த பலனைத் தருமென்பதில் ஐயம் இல்லை.

---

பகவான் விருஷபதேவருக்கு முதன்முதலில் ஆகாரதானமளித்த சிறப்பு பெற்றவர் சிரேயாம்சர் என்பதை அறிவிக்கும் வண்ணம் பரத சக்ரவர்த்தி சிரேயாம்சன் மாளிகைக்கு வந்து அவருக்கு "தானதீர்த்தங்கரன்" எனப் பட்டமளித்து சிறப்பு செய்தார். - ஸ்ரீபுராணம்

*துறவியர்களை ஆகாரத்திற்கு அழைக்காத வீடு சிறந்ததாகக் கருதப்படாது. அத்தகு இல்லத்தில் குபேரனுக்கு ஒப்பான செல்வம் இருந்த போதிலும் அது சிறந்ததாக கருத முடியாது. கடலில் அளவு கடந்த நீர் நிரம்பி இருந்த போதிலும் அது குடிப்பதற்கோ அல்லது மற்ற செயலுக்கோ பயன் படாது. அது போல எவ்வளவு செல்வம் நிரம்பி இருந்த போதிலும் ஸத்பாத்திர தானத்திற்குப் பயன் படுத்தாத செல்வம் சிறந்ததாகக் கருத முடியாது.

உடலில் தலையும், பொறியில் கண்ணும், பானங்களில் பாலும் தலைமையாக இருப்பது போன்று எல்லா வற்றிலும் உணவு முக்கியமாகும், உணவு பசி என்னும் நோய்க்கு மருந்தாக உள்ளது, மருந்து வகையில் இது சிறந்தது. ஆதலால் ஆகார தானம் ஒப்பற்ற தானமாகும். அன்ன தானம் சிறந்த தானமாகும்.

மிகுபொருள் ஆசை ஆக்கத்திற்குக் காரணம்; ஆக்கம் ஆசையைப் பூர்த்தி செய்கிறது. ஆனால் கால மாறுகையினால் எண்ணமும் ஆசையும் மாறுகின்றன. ஆசையும் தேவையும் மாறுகையடைந்த போதிலும் உண்மை தத்துவம் நிலைத்து

---

1. கிம் திரவ்யேன குபேரச்ச, கிம் சமுத்திரஸ்சவாரிணா, கிம் கிருஹேண க்ருதஸ்தஸ்ய புக்திர் யத்ர நயோகினாம்

2. சர்வேஸு கரத்திரேசு, சிர : பிரதானம்.
சர்வேந்திரியாணாம் நயநம் ப்ரதானம்.
சர்வேஸு பயயேயேசு பய : ப்ரதானம்.
சர்வௌஷ தீனாம் அசனம் ப்ரதானம்.

நிற்கிறது. திருதியைநாள் அன்று செய்த தானத்தின் மகிமை நிலைத்துள்ளது. அஃது இல்லறத் தாருக்கும் ஜைன சமூகத்திற்கும், தேசத்தார்க்கும் மிக சிறந்த செயலாக அமைந்துள்ளது. பற்பல கலைகளும், பொருட்களும், புறப்பொருட்களாகும், ஆனால் ஆகார தானத்தின் சிறப்பினால் ஏற்படும் உண்மைத் தத்துவம் அகத்தைத் தூய்மைப்படுத்துவதாகும்.

தானவழிமுறை உலகத்திலேயே ஒப்பற்றதாகும். பிறர் கொடுக்கும் தானத்திற்கு நாம் துணை புரிவதும் நம்முடைய அகத்தில்தோன்றிய அறத்தின் சாயலாகும். அதுவே கருணை யின் காட்சியாகும். தானத்தினால் பொருட்கள் மீதுள்ள பற்றும் மனதில் தோன்றும் மமதையும் குறைகிறது. தானம் (கொடை) தியாகத் தன்மையைக் கற்பிக்கிறது. ஒருவர் மற்றொரு வரைச்சார்ந்துள்ள இணக்கமான தன்மையை வளர்க்கிறது, நற்பிறவிக்கு வித்தாகிறது. ஆதலால்தான் எல்லாச் செயல்களிலும் தானத்திற்கு முதலிடம் அளிக்கப்படுகின்றது. தானம் இல்லையேல் அறத்தின் சிறப்பு குறையும் என்பதில் ஐயமே இல்லை. துறவியர்களுடைய ஒழுக்கத்தை மேன்மையுறச் செய்வது இல்லறத்தாருடைய கடமையாகிய ஆகார தானமே ஆகும்.

விதேக க்ஷேத்திரத்து புண்டரீகிணி என்னும் நகரத்தில் விருஷபதேவர் ஆன்மா வஜ்ஜிரஜங்க மன்னனாகவும் ஸ்ரேயாம்சகுமாரர் ஆன்மா அவருடைய துணைவி ஸ்ரீமதியாகவும் இருந்த பொழுது இவ்விருவரும் தம்பரிவாரங்களுடன் ஒரு நாள் காட்டில் கூடாரம் அமைத்து தங்கி இருந்தனர். அப்பொழுது அங்கு தமதரர் சாகரசேனர்

என்னும் ஆகாயருத்தி பெற்ற சாரண முனிபுங்கவர்கள் ஆகாய மார்கமாக வருவதைக் கண்ட இவர்கள் ஒன்பது புண்ணியக் கிரமத்துடன் அவர்களை வரவேற்று ஆகாரம் அளித்தனர்.

அப்பொழுது கீரிப்பிள்ளை, குரங்கு, சிங்கம், பன்றி ஆகிய நான்கு விலங்குகளும் அங்கு நிகழ்ந்த ஆகாரதானத்தைப் பாத்துக்கொண்டு மனமகிழ்ந்து பக்தியுடன் அமர்ந்திருந்தன. இவை நான்கும் ஆகார தானத்திற்கு இடையூறு விளைவிக்காமல் பார்த்துக் கொண்டிருந்தன. அதன் பயனால் அவை நான்கும் அடுத்த பிறவியில் போக பூமியில் போய் பிறந்து அளவு கடந்த இன்பத்தை அனுபவித்து பிறகு பரதேஸ்வர மன்னனுக்கு மகன்களாகப் பிறந்தன என்று மகாபுராணம் கூறுவது அறியத்தக்கது.

அன்பர்களே ! நற்செயலைச் செய்வதும், பிறரைச் செய்யும்படி தூண்டுவதும் அவர்கள் செய்த தானத்தைக் கண்டு அல்லது செவியால் கேட்டு மனமகிழ்வதும் நல்வினைக் கட்டிற்குக் காரணமாகும். தீயச் செயலைச் செய்வதும் தீயச் செயலைச் செய்யும்படி தூண்டுவதும் அதைக் கண்டு அல்லது கேட்டு மனமகிழ்வதும் தீவினைக்கட்டிற்குக் காரணமாகுமென்பதை அறிவீர்களாக.

## அக்ஷயதிருதியை என்று பெயர்வரக் காரணம் :

வைசாக மாதம் வளர்பிறை மூன்றாம் நாள் (திருதியை) அன்று ஸ்ரேயாம்ச குமாரர் விருஷப மாமுனிவருக்கு அகாரம் அளித்து தான தர்மத்தின் சிறப்பினைக் காட்டினார். அந்நாளிலிருந்து இந்த தூய அக்ஷயதிருதியை பருவமானது ஆரம்பமாயிற்று என்றால் இதற்கு தானதிருதியை என்று ஏன் பெயர் வழங்கக் கூடாது? அல்லது இந்த நிகழ்ச்சியின் தொடர்பினை அறிவிக்கக்கூடிய வேறு ஏதாவதொரு பெயர் ஏன் வழங்கக் கூடாது? இதற்கு அக்ஷய திருதியை என்று பெயர் வழங்குவதற்கு என்ன காரணம்? என்பதைப்பற்றி ஆய்வு செய்வது நல்லது.

யுகாதி தேவ பகவான் விருஷபதேவர் தன்னுடைய கை அளவு நூற்று எட்டு முறை கருப்பஞ்சாறு பருகினார். அதில் ஒரு துளி கூட குறையவில்லை. (க்ஷயமாக வில்லை) ஒரு துளி கூட கீழே விழவில்லை. வைசாக மாத வளர்பிறை மூன்றாம் நாள் (திருதியை) அன்று தான் இந்த குறைவு பெறாத அதாவது "அக்ஷய" விதிமுறை மக்களால் அறிந்து கொள்ளப்பட்டது. இதனால்தான் இந்த திருதியைக்கு "அக்ஷய திருதியை " என சிறப்புப் பெயர் வழங்குகிறது.

விருஷபதேவருக்கு ஆகாரம் அளிக்கும் பாக்கியம் பரதமாமன்னனுக்குக் கூட கிடைக்கவில்லை. ஸ்ரேயாச குமாரர் அளித்த தானத்தைக் கண்ட பரதேஸ்வர மன்னர் அவரை அணுகி மகா தானசீலரே ! விருஷபதேவர் ஆகாரத்திற் காகத்தான் வந்தார் என்பது உங்களுக்கு எப்படி தெரிய

வந்தது? இவ்வுலகில் இதுவரையிலும் இந்த விதி முறைகளை யாரும் கண்டதும் இல்லை கேட்டதும் இல்லை. ஆதலால் இதைப் பற்றி யாருக்குதான் தெரியும்? என்று கேட்க ஸ்ரேயாம்ச குமாரர், முற்பிறவியில் நிகழ்ந்தவை எனக்கு நினைவில் தோன்றியது. இந்த நிகழ்ச்சி என்னுடைய முற்பிறவி நினைவைக் கொண்டுவர துணை புரிந்தன, எனக் கூறினார்.

இதைக் கேட்ட பரதேஸ்வர மன்னர், ஸ்ரேயாம்ச குமாரரை போற்றலானார். குருவம்ச குமாரரே ! நீங்கள் எனக்கு விருஷப தேவரைப் போன்று வணக்கத்திற்கும் மரியாதைக்கும் பாத்திரமானவர், நீங்கள் தானவிதியை துவக்கிவைத்தவர், மகாபாக்யசாலி, அழியா புண்யப் புகழைப் பெற்றவர், என்று மன்னர் மனமார வாழ்த்தினார். எவ்வித குறைபாடும் இல்லாத பாராட்டு அந்த திருதியை நாளன்று நிகழ்ந்ததினால் அந்நாளுக்கு அக்ஷயதிருதியை எனப் பெயர் வழங்கலாயிற்று.

பரத மன்னனுடைய பாராட்டுதலைக் கண்ட மக்களும் கூட ஸ்ரேயாம்ச குமாரிடம் சென்று இளவரசே ! ஆறு மாதத்திற்கு முன்பு விருஷபதேவ மாமுனிவர் வந்தபோது மக்கள் அவருக்கு உயர்ந்த மதிப்புமிக்க சிறந்த பொருட்களை கொடுத்தனர். அவர் அவற்றை ஏற்கவில்லை. இன்று நீங்கள் கொடுத்த கருப்பஞ்சாற்றை வாங்கிப் பருகினாரே அதற்குக்காரணம் என்ன? அன்று உயர்ந்த பொருட்களைக் கொடுக்க முன்வந்த தனவான்களால் கருப்பஞ்சாறு கொடுக்க முடியாதா என்ன? அன்று இதை அவர் கேட்டிருக்கக் கூடாதா என்ன? இன்று நீங்களாகவே கொடுத்த கருப்பஞ்சாரை வாங்கிப் பருகியதற்கு யாது காரணம்? என்று கேட்டனர்.

இதைக் கேட்ட ஸ்ரேயாம்ச குமாரர் துறவறத்தைப் பற்றியும் முனிவர்களுக்கு ஆகாரம் அளிக்க கடைப்பிடிக்கவேண்டிய விதிமுறைகளைப் பற்றியும் விளக்கமாகக் கூறலானார்.

பகவானாக ஆக இருக்கும் விருஷபதேவர் துறவறத்தைக் கைக் கொண்டவர். அவர் மனம், வாக்கு செயல், யாவும் ஒன்று பட்டு செயல்படும். கொல்லாமை முதலிய பேரறத்தைக் கொண்டவர். அலௌகீக சிந்தனையில் உள்ள பேரான்மா, இப்பொழுது நம்மைக் காட்டிலும் உயர் நிலையில் உள்ள அவர் தனக்கு ஏற்ற செயல் வெவ்வேறு உண்டு. அவைகளைப் பற்றி நீங்கள் அறிந்தவர் அல்ல. இதுவரை இல்லற ஒழுக்கங்களில் ஒழுகிய நீங்கள் துறவியரைக் கண்டதில்லை. நான் முற்பிறவியில் விதேக சேக்ஷதிரத்தில் ஸ்ரீமதி என்கிற பெயரைப் பெற்று வஜ்ஜிரஜங்க மன்னனுக்கு இல்லறத்தரசியாக இருந்தேன். அப்பொழுது அங்கு சாரண முனிவருக்கு ஆகாரதானம் கொடுத்த நினைவுகள் எனக்கு வந்தன . அவை எனக்கு ஆகாரம் அளிப்பதற்கு வழிகாட்டின.

விருஷபதேவர் இல்லறத்தை விட்டு துறவுபூண்டவர்; உலகியலான சூழ்நிலையிலிருந்து வேறுபட்டவர். துறவியர்களுக்கென சட்டதிட்டங்கள் உண்டு. அந்த சட்டதிட்டங்களுக்கு உட்பட்டவர். அவர் உடற் பற்றினையும் விட்டவர். அவருக்கு ஆபரணமும் தேவையில்லை; ஆடையும் தேவையில்லை; அவர் குளிப்பதுமில்லை, அவருக்கு யானை, குதிரை, பல்லக்கு ஆகிய வாகனங்கள் தேவை இல்லை. இவையாவும் மனிதனை அடிமைப்படுத்தும் பொருட்கள்; இவை ஆன்மீக இன்பத்தைப் பெறும் செயலுக்கு இடர்ப்பாட்டினை விளைவிக்கக்கூடியவை.

புருஷார்த் தத்தையும், வீரியத்தையும் குறைக்கக்கூடியவை. இத்தகு பொருட்களால் நுற்றுக்கணக்கான வெவ்வேறு கவலைகள் உண்டாகும். இவை எல்லாம் நிலையிலாத போகத்திற்குத் துணைபுரியும் பொருட்களாகும். நிலையான பேரின்பத்தை அடைவதற்கு தகுதியானவையல்ல. பகவான் தியாகப் பாதையை கடைப்பிடிப்பவர். ஆதலால் அவருக்கு இத்தகு பொருட்களால் பயன் யாதுமில்லை. எனவே இவை அனைத்தையும் தியாகம் செய்துவிட்டார்.

வனஸ்பதிப் பொருட்களாகிய மலர், கனி, காய்கள் ஆகிய உயிர்ப் பொருட்கள் மீதும் கருணை கொண்டவர். அவர் இவற்றை தொடுவதும் இல்லை அவர் தூய வழிமுறையில் சமைத்த உணவையே ஏற்பர். அது அவருக்னெ சமைத்ததாக இருக்கக்கூடாது. இல்லறத்தார் தமக்கென தூயமுறையில் சமைத்த உணவையே ஏற்றுக் கொள்வார். நீங்களும் இந்த விதிமுறைகளுக்கு ஏற்றவாறு ஆகாரம் அளித்தால் அதை அவர் ஏற்றுக்கொள்வார். இந்த விதிமுறைப்படி துறவியர்கள் நூற்றெட்டு குணங்களைக் காப்பாற்றுகிறார்கள். உடலுக்கு ஏற்படும் இன்னல்களைப் பொறுத்தக்கொண்டு தன்னுடைய குணத்தை குறைபடாதவாறு வைத்துள்ளார்கள். குறை வில்லாமல் இருப்பதே அக்ஷயமாகும், எனக்கூறினார்.

ஸ்ரேயாம்சகுமாரர் இத்தகு விளக்கங்களை எடுத்துக் கூறிய பிறகு மக்கள் அனைவரும் இதுவரை அறிந்திராத ஒப்பற்ற கருத்துக்களை மக்கள் அறிந்து கொண்டனர். பகவான் தன்னுடைய நூற்றெட்டு குணங்களைக் குறைபடாது செயல்பட துணை இருந்த அந்த திருதியைக்கு "அக்ஷய திருதியை" எனப் பெயர் வழங்கலாயிற்று.

விருஷபதேவருக்குப் பிறகு அவர் காட்டிய அறப்பாதையில் ஒழுகிய துறவியர்களுக்கு துறவு விதிமுறைகளில் குறை காணாதவாறு (அக்ஷயமாக) வைத்துக்கொள்வதற்கு ஸ்ரேயாம்சகுமாரர் அளித்த தானத்தின் வழிமுறைகள் பேருதவியாக இருந்தன. அதனால் இந்த புனித நாளுக்கு "அஷய திருதியை" எனப் பெயர் விளங்கலாயிற்று.

நன்கு சமைத்த ருசிகரமான மணமுள்ள பொருட்கள் மாலை வேளையில் மாறுகை அடைந்து உண்பதற்குத் தகுதியில்லாமல் போய்விடுகிறது அத்தகு பொருட்களால் வளர்ந்த உடலும்கூட அழியக்கூடியதே. அப்படி இருந்த போதிலும் விருஷபதேவர் ஓர் ஆண்டு காலம் உபவாசம் இருந்தும் கூட அவர் உடலும் பலமும் சிறிதளவும் குறைய வில்லை (க்ஷயமாகவில்லை). அந்த அக்ஷய சரீரத்தையுடைய அத்தூயோருக்கு திருதியை அன்று ஆகாரம் அளித்ததினால் அந்நாள் "அக்ஷய திருதியை" என ஆயிற்று.

விருஷபதேவர் முதன் முதலாக ஆகாரத்திற்கு வந்தபோது ஆகாரம் கிடைக்காததினால் அவர் வழி வந்த பக்தர்கள் அவருடைய உடல் பலம் குன்றிவிடுமோ? தவத்திற்குத் துணை புரியாதோ? எனக் கவலையுற்றிருந்தனர். இந்த அக்ஷயதிருதியை அவர்களுடைய கவலையைப் போக்கியது. மேலும் தவவழியாகிய அறவழியில் தொடரந்து செயல்படக் காரணமாக இருந்தது. ஒழுக்கத்தையும் விரதத்தையும் காப்பாற்றதுணைபுரிந்த அந்நாள் "அக்ஷய திருதியை" நாளாகக் கொண்டாடினர்.

# வினைப்பயன்

இறங்கு காலத்தின் மூன்றாம் பிரிவாகிய நற்றீக் காலத்தின் கடைசி பகுதியில் ஆதிபகவன் தோன்றினார். அவர் உலக மக்களுக்கு வாழ வழிவகைகளைக் கற்பித்து இன்ப வாழ்க்கைக்கு வேண்டிய விதிமுறைகளை காட்டினார். பின்னர் அவர் துறவு மேற்கொண்டு, துறவு நெறிகளைக் கடைப்பிடித்து தவ ஒழுக்கத்தில் ஒழுகும்போது ஆறுமாத காலம் உபவாசம் இருப்பதாக உறுதிகொண்டு தவமியற்றியபின் அவர் ஆகாரத்திற்கு வந்தார் அப்போது அவருக்கு ஆகாரம் வழங்கும் விதிமுறைப்படி ஆகாரம் கிடைக்ககாததினால் மறுபடியும் காட்டிற்குச் சென்று மேலும் ஆறுமாத காலம் தவம் செய்தபிறகு  ஆகாரத்திற்கு வந்தபோது ஸ்ரேயாம்சகுமாரர் ஆகாரம் அளித்தார் என்பதை ஏற்கனவே படித்தீர்கள், முதல் ஆறுமாத காலம் கழித்து வந்தபோது அவருக்கு ஏன் ஆகாரம் கிடைக்கவில்லை? எந்த வினைப்பயனால் அத்தகு புண்ணியசாலியாகிய விருஷபதேவர் ஒரு ஆண்டு காலம் (பன்னிரண்டு மாதங்கள்) வரை உபவாசம் இருக்க நேர்ந்தது என்பதை ஆராய்வோம்.

விருஷபதேவர் மக்களுக்கு எல்லாக் கலைகளையும் எல்லாதொழில் வகைகளையும் கற்பித்தார். வேளாண்மைத் தொழிலைப் பற்றி அறிவுறுத்தியவாறு மக்கள் அத்தொழில் நடத்தி வந்தனர். உழவர்கள் நெற்பயிர் சாகுபடி செய்யும் போது எருதுகள் அப்பயிரை மேய்ந்து வந்தன. அதைக் கண்ட விருஷபதேவர் எருதுகளுக்கு வாய்ப்பூட்டு போட்டு வைக்கும்படி கூறினார். அக்காலத்து மக்கள் எளிய இயல் புள்ளவர்கள், கள்ளம் கபடமற்றவர்கள். விருஷபதேவரால்

எவ்வளவு அறிவிக்கப்பட்டதோ அவ்வளவுக்கவ்வளவே அறிந்து வந்தனர். அவர்கள் தாம் செய்யும் செயல்களால் என்ன நிகழுமோ என்பதை அறிந்தார்களில்லை. விருஷபதேவர் எருதுகளுக்கு வாய்ப்பூட்டு போடு என்று கூறியதுமே அவர்களும் அப்படியே செய்துவிட்டனர். நெல் சாகுபடி ஆனபிறகு அந்த வாய்ப்பூட்டை அகற்றிவிடுங்கள் என விருஷபதேவரும் அதுசமயம் கூறவில்லை. உழவர்களால் வாய்ப்பூட்டு போட்டு பன்னிரண்டு நாழிகை கடந்துவிட்டன. அவ்வளவு நேரம் வரை எருதுகள் தீனி தின்பதும் தண்ணீர் குடிப்பதும் தடைபட்டுவிட்டன. இதனால் அவை சோர்ந்து மலிந்து இருப்பதைக் கண்ட மக்கள் மறுபடியும் விருஷபதேவரிடம் ஓடோடிச் சென்ற பிரபுவே! நீங்கள் கூறியவாறு எருதுகளுக்கு வாய்ப்பூட்டு போட்டுவிட்டோம். அவை புல்லும், வைக்கோலும், தண்ணீரும் ஏற்கவில்லையே அவைகள் சோர்வுற்று மெலிந்துள்ளனவே என்றனர். அதை கேட்ட விருஷபதேவர் அந்தோ அஞ்ஞானி மக்களே! அறியாமையுள்ளவர்களே ! நீங்கள் நெல் சாகுபடி செய்யும்போதுதான் வாய்ப்பூட்டு போடவேண்டுமே தவிர, அந்த வேலை முடிந்த பிறகு அதனை அகற்றிடவேண்டும். வாய்ப்பூட்டு போட்டபடியே இருந்தால் அவை தீனியும் தண்ணீரும் எப்படி ஏற்கும்? தீனியும் தண்ணீரும் இல்லாமல் அவை எப்படி உயிர் வாழ முடியும்? உடனே போய் அதை அகற்றிவிடுங்கள் எனக் கூறினார்.

விருஷபதேவரின் இந்த வார்த்தையைக் கேட்ட உழவர்கள் வாய்ப்பூட்டை அகற்றிவிட்டனர். எருதுகள் மேயவும் தண்ணீர் பருகவும் ஆரம்பித்தன பன்னிரண்டு நாழிகை நேரம் வரை அவை தீனியும் எடுக்காமல் தண்ணீரும் பருகாமல்

இருந்ததினால் தொல்லையை அனுபவித்தன. விருஷபதேவர் தன்னலமின்றி வாய்ப்பூட்டு போடும்படிக் கூறினாரே தவிர எருதுகள் மீது அவருக்கு விரோதம் கிடையாது. அப்படி இருந்தபோதிலும் "வாய்ப்பூட்டு போடு என்கிற வார்த்தையைக் கூறியதனால்தானே பன்னிரண்டு" நாழிகைவரை தீனியும் தண்ணீரும் கிடைக்காமல் அவை வருந்தின. உடல், வாக்கு, மனம் இவைகளின் செயலால் வினை ஊற்றும், வினைக் கட்டும் ஏற்படுகிறது என்பது ஜைன சித்தாந்தம், விருஷபதேவர் கூறிய வாக்கினால் எருதுகளுக்கு துன்பம் ஏற்பட்டது. இங்கு அவர் மனமும், உடலும் செயல்படாதபோதிலும் வாக்கு (வார்த்தை) செயல்பட்டது அல்லவா? அதனால் அவருக்கு அந்தராயம் என்னும் வினையின் ஊற்றும் கட்டும் ஏற்பட்டது. எருதுகள் பன்னிரண்டும் நாழிகை தீனி இல்லாமல் இருந்தனால் அந்த பன்னிரண்டு நாழிகைக்கு பதிலாக பன்னிரண்டு மாதம்வரை அவருக்கு அன்ன ஆகாரம் இல்லாமல் இருக்க நேர்ந்தது.

அன்பர்களே ! வினை அல்லது, விதியின் வலிமையை உணர்ந்தீர்களா? வினை, விதி, கர்மம், தெய்வம், இவையாவும் ஒரு பொருளின் பல சொற்களாகும் வினையின் பலன் தவிர்க்க முடியாது. யாராக இருந்தாலும் வினைப் பயனை அனுபவித்தே தீரவேண்டும். விருஷபதேவரின் புதல்வர் பரதன் ஆறு கண்டங்களுக்கு அதிபதி, பாகுபலியும் அதிக பலம் வாய்ந்தவர். இவ்விருவரையும் வினை விடவில்லை! விருஷபதேவர் திருவடிகளிலே தேவேந்திரன் சேவை யாளனாக இருந்தால் இவர் மூவுலகிற்கும் தலைவராவார். உலக மக்கள் எல்லோரும் இவருக்காக யாவற்றையும் அர்ப்பணிக்க ஆயத்தமாக இருந்தனர். அவ்வளவு சீரும்,

சிறப்பும் பெற்ற இவரையும் வினை விட்டபாடில்லை. இவர் ஆகாரத்திற்காக வீதி வழியாக வீடு வீடாகச் சென்றார் ஆனால் அந்தராய வினைப்பயனால் அவருக்கு ஆகாரம் கிடைக்கவில்லை

எண்வகை வினைகளில் காதி வினை நான்கு, அகாதி வினை நான்கு. காதி வினை ஆன்மீக குணத்தைக்கெடுக்கும் ஆற்றல் பெற்றது. அந்த நான்கில் அந்தராய வினையும் ஒன்று. அது 1. தானாந்தராயம் 2. லாபாந்தராயம் 3. போகாந்தராயம் 4. உபபோகாந்தராயம் 5. வீர்யாந்தராயம் என ஐவகைப்படும். இவற்றில் தானாந்தராய வினைக்கட்டு விருஷபதேவருக்கு ஏற்பட்டதினால் ஆகாரம் கிடைக்கவில்லை. இந்த வினை விலகுவதற்கு ஸ்ரேயாம்சகுமாரர் நிமித்தமாக இருந்தார். இந்த வினை உதிர்ப்பு ஏற்பட்டதுமே ஸ்ரேயம்சகுமாரர் ஆகாரதானமளிக்க நிமித்த காரணமாக ஏற்பட்டார்.

## பண்டிகையும் : பருவமும்

பண்டிகை பருவம் இவ்விரண்டிற்கும் வேறுபாடு உண்டு. பண்டிகை உலகியல் இன்பத்தின் சாயல். ஆனால் பருவம் ஆன்மீக இன்பத்தை பெறுவதற்கு துணைபுரியம் புனித நாள் பண்டிகை நாளன்று சுவைமிக்க பண்டங்களைச் செய்து உண்பதிலும் அழகிய ஆடைகளை அணிவதிலும் சிறப்பினைக் காண்கின்றனர். இதற்கெனவே பண்டிகைக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. இந்நாட்களில் ஆடம்பரமான செயல்களில் ஈடுபாடும், சுற்றத்தாருடன் சேர்ந்து கேளிக்கை, களிப்பு ஆகிய உலக இயலான சடங்குகளைச் செய்வது நிகழ்கின்றன.

பருவ நாட்கள் இம்மாதிரியான செயல்கள் நடை பெறுவதில்லை. அன்று புலனடக்கத்திற்கு ஏற்ப விரதம் கைக்கொள்வது, கட்டுப்பாடு (சம்யமம்), எளிய வாழ்க்கை தியாகம், ப்ரம்மசர்யம், தவம், உபவாசம் முதலிய தூய செயல்கள் செய்யப்படுகின்றன. பருவ நாட்களில் செய்யப்படும் செயல்கள் யாவும் ஆன்மீக இன்பத்தைப் பெறுவதற்கு துணைக் காரணமாக அமைகின்றன.

பண்டிகை மனிதனுடைய மனதை மகிழவைத்து இதில் தான் உயர்வும் இன்பமும் உண்டு என்பதைக் காட்டுகிறது. ஆனால் பருவம் மனக் கட்டுப்பாட்டையும், புலனடக்கத்தையும் வலியுறுத்தி அழியா பேரின்பத்தைப் பெறவேண்டிய செயலைத் தூண்டுகிறது. பண்டிகை உலகியல் வாழ்வில் அழியும் இன்பத்தை அளிக்கிது என்றால் பருவம் அழியா இன்பத்தின் தோற்றத்தை அளிக்கிறது.

பண்டிகைக்கும் பருவத்திற்கும் இடையேயுள்ள சிறப்பினையும் சிறப்பின்மையும் காட்டுவதற்கெனவே இதன் இலக்கணத்தை ஒப்பிட்டுக் கூறப்படுகிறதே தவிர பண்டிகையை தாழ்த்திக் கூறுவதற்கு அல்ல. ஏழை, எளியவரும் திக்கற்ற வரும் தினக்கூலி வாங்கி வாழ்க்கை நடத்துபவரும் பண்டிகை நாளன்று எந்தவிதத்திலாவது பொருளை ஈட்டி சுவைமிக்க உணவை சமைத்து உட்கொண்டு புதிய ஆடைகளையுடுத்தி மகிழ்கின்றனர். அன்று தங்களுடைய இன்னல்களையும் மறந்து ஆனந்த உலகில் மூழ்கி இருக்கின்றனர். சிறிது நேரத்திற்காவது தம்முடைய குடும்பத்தில் ஏற்படும் துன்பங்களை மறந்து உலகியல் இன்பத்தில் ஆழ்ந்து இருக்கின்றனர். இந்த

கருத்துப்படி பண்டிகை உலகியலைப் பொருத்தவரை சிறப்பு வாய்ந்ததே ஆகும். பண்டிகைக்கு சிறப்பிடம் கொடுக்காவிடில் இத்தகு மக்களுக்கு வாழ்க்கையில் இன்பம் ஏற்படாது.

உலகியல் நோக்குப்படி பண்டிகைக்கு எவ்வளவு சிறப்பு உண்டோ அவ்வளவு சிறப்பு, ஆன்மீக நோக்குப்டி பருவத் திற்கும் மதிப்பு உண்டு.

தீவினைச் சக்திக்குச் சிக்குண்டவரும், புலனின்பத்தில் மூழ்கியவரும், சுகபோகத்திற்கு கட்டுப்பட்டவரும், மோகத்தில் மயங்கியவரும் பருவ நாளன்று சிறது நேரமாவது தர்ம சிந்தனையில் இருக்கின்றனர். விரதத்தைக் கடைப்பிடிக்கின்றனர். அறத்தில் மனதை செலுத்த பருவம் அவர்களை தூண்டுவிக்கிறது.

உலகியலான இன்பத்திற்கு பண்டிகை எவ்வளவு முக்கியத்வமோ அவ்வளவு, ஆன்மீக இன்பத்திற்குப் பருவம் முக்கியமேயாகும். விரதம், அறம், கட்டுப்பாடு, ஆகியவை பருவத்திற்குச் சிறப்பினை அளிக்கின்றன. அவ்வாறு பருவத்திற்குச் சிறப்பு அளிக்காதிருப்பின் போகத்தில் சிக்குண்டு காமம், வெகுளி, மயக்கம், ஆகியவற்றில் உழலும் உயிரினங்களுக்கு தம் வாழ்க்கை சாரமற்றதாக காணப்படும், பிறப்பு, மூப்பு, இறப்பு, ஆகிய துன்பங்களிலிருந்து விடுவிப்பதும் அழியா இன்பத்திற்கு வழி காட்டுவதும் பருவ நாட்களே ஆகும்.

## அக்ஷயதிருதியை
## பருவமா? பண்டிகையா?

பருவம், பண்டிகை இவ்விரண்டினைப்பற்றி மேலே ஆராயப்பட்டது. பண்டிகை உலகியலான இன்பத்திற்கு காரணமாகவும் உள்ளனவென்பதை அறிந்தோம். அக்ஷய திருதியை ஒரு புனிதநாள். யுகாதி புருடருக்கு தானம் அளித்ததைப்பற்றி அறிவுறுத்தும் நாள் அது. அதைப் பருவ நாள் என்றே கூற வேண்டும். அந்த நாள் நினைவிற்கு வந்த உடனே தவம், தானம், தியாகம், புலனடக்கம், ஆகிய தூயத்தன்மை புலப்படுகிறது. அன்று மக்கள் கருப்பஞ்சாறு முதலிய சிறந்த உணவுகளை ஆகாரதானமாக அளிக்கும் வழக்கம் நம் நாட்டிலும் உண்டு. இவை எல்லாம் நற்பண்பை உணர்த்தும் நல்லறச் செயல்களேயாகும். அன்று சிலர் குடும்ப வேலைகளையும் விட்டு துறவியரைப் போன்று தவம், சாமாயிகம், தியானம், தத்துவ சர்ச்சை, முதலான ஆன்மீக மேன்மைக்குத் துணைபுரியம் செயல்களைச் செய்பவர்களும் உண்டு. இத்தகு செயல்களால் உள்ளத்தில் புதிய புதிய தூய எண்ணங்கள் தோன்றுகின்றன. அவை ஆன்மீக இன்பத்தைப் பெறவும், அஞ்ஞானம் விலகவும், நல்ஞானம் ஏற்படவும், அனந்தசுகம் அடைவதற்கும் காரணமாகும் ஆதலால் **அக்ஷய திருதியை நாள் பருவமே தவிர பண்டிகை நாள் அல்ல.**

த்விதியை, பஞ்சமி, அஷ்டமி, ஏகாதசி, சதுர்தசி (இவைகள் பஞ்சபருவங்களாகும்) அமாவாசை பௌர்ணமி ஆகிய திதிகளும் பருவநாட்களாக ஏன் கருதப்படுகின்றன? எனபதைப்பற்றி ஆய்யு செய்யும்போது அவற்றின் சிறப்புள்ள புனிதமான கருத்து புலப்படுகின்றது.

த்விதியை திதிக்கு இரண்டு நாட்கள் சென்று பஞ்சமியும், பஞ்சமிக்கு பிறகு இரண்டு நாட்கள் சென்று அஷ்டமியும் அதற்கு இரண்டு நாட்கள் சென்று ஏகாதசியும், அதற்கு இரண்டு நாட்கள் சென்று சதுர்தசியும், வருகிறது. இரண்டு இரண்டு திதிகள் விட்டு விட்டு மூன்றாவது திதி புனிதமான நாளாகவும் பருவ நாளாகவும் கருதப்படுகிறது. இந்த முறை அடுத்த பிறவிக்குக் ஆகவேண்டிய ஆயுள் வினைக்கட்டை அறிவுறுத்துகிறது. இது எப்படி எனில் அடுத்த பிறவிக்கான வினைக் கட்டினை ஜீவன் இந்த பிறவியிலேயே சேர்த்துக் கொள்ளுகிறது என்பது கர்ம சித்தாந்தம். ஒரு ஜீவனுக்கு இந்த பிறவியில் எவ்வளவு ஆயுட்காலம் உண்டோ அதில் இரண்டு பாகம் கழிந்து மூன்றாம் பாகம் எஞ்சி இருக்கும்போது அடுத்த பிறவி வினைக்கட்டு ஏற்படுகிறது. அந்த மூன்றாம் பாகத்தில் மேலும் மூன்று பாகம் செய்து அதில் இரண்டு பாகம் கழித்து மீதி ஓர் பாகம் இருக்கும்போது அடுத்த பிறவிக்கட்டு ஏற்படும்.

ஆதலால் ஜீவனின் ஆயுட்கால அளவில் மூன்றாவது பாகம் சிறந்த முறையில் கழியவேண்டும். இந்த மூன்றாவது பாகத்தில் நிகழும் நன்மை தீமையின் பலன் அடுத்த பிறவிக்கு கட்டக்கூடிய ஆயுளுக்குக் காரணமாகும். ஆதலால் அறவோர்கள் பதினைந்து திதிகளையும் (நாட்களையும்) மூன்று மூன்றாகப் பிரித்து அதில் இரண்டு திதிகளைக் கழித்து மூன்றாவது திதிக்கு சிறப்பு அளித்துள்ளனர். அந்த நேரத்தில் செய்யும் நல்லறச் செயல்களால் நற்பிறவிக் கட்டு ஏற்படும் என்கிற கருத்து இங்கு புலப்படுகிறது.

வாழ்நாட்களின் மூன்றாவது பாகத்தில் ஒருவேளை அடுத்த பிறவிக்கேற்ற ஆயுள் வினைக்கட்டு ஏற்படாவிடின்

அப்பிறவியின் கடைசி காலத்தில் அடுத்த பிறவிக்கு ஏற்ற ஆயுள்கட்டு அவசியம் ஏற்படும், ஆதலால்தான் திதிகளில் கடைசி திதியாகிய அமாவாசை, பௌர்ணமி இவ்விரண்டும் பருவநாட்களாக ஏற்கப்பட்டன. இந்த பருவ திதிகள் விரதம் உபவாசம், அறப்பணி ஆகியவற்றிற்குச் சிறந்தவைகளாகும்.

## மற்றுமோர் சிறந்த பருவம் தசலட்சணம்

திகம்பர ஜைன மரபுப்படி புரட்டாசித் திங்கள் வளர்பிறை பஞ்சமியிலிருந்து சதுர்தசி முடிய "தசலக்ஷண" பருவம் வருகிறது. அதற்கு "பர்யூஷணம்" என்னும் மற்றொரு பெயர் உண்டு. அது ஜைன தர்மத்திற்கென சிறந்த புனிதப்பருவம் ஆகும். இந்த பருவ நாட்களில் விரதம், உபவாசம் (ஆகம நூல்களை வாசித்தல்) ஸ்வாத்யாயம், தானம், தவம், ஆகிய புனிதச் செயல்களை. ஜைனர்கள் செய்கின்றனர், சிறியவர் முதல் பெரியவர் வரை இத்தகு புனிதச் செயல்களைத் தவறாது செய்கின்றனர். ஆன்மா தன்னுடைய இயல் குணத்தைப் பெறவேண்டுமென்கிற நோக்கத்துடன் அப்பருவ நாட்களில் அறச் செயல்களைச் செய்கின்றனர்.

ஸ்வேதாம்பர ஜைன மரபுப்படி பர்யூஷண பருவ நாள் ஒவ்வொரு ஆண்டும் பாத்ரபத (புரட்டாசி) மாதம் தேய்பிறை திரியோதசி நாள் அன்று துவங்கி, அம்மாத வளர்பிறை பஞ்சமி நாள் முடிய கொண்டாடப்படுகிறது. இந்த எட்டு நாட்களில் முறைப்படி தரிசனம், ஞானம், ஒழுக்கம், தவம், பக்தி சுவாத்தியாயம், தானம், அகிம்சை முதலிய எட்டு அறக்கருத்தினைப் பற்றி சிந்தனை செய்யப்படுகிறது. திகம்பர

ஜைன மரபுப்படி பத்து நாட்கள் கொண்டாடும் தசலட்சன பருவ நாட்களில் உத்தம க்ஷமை, உத்தம மார்தவம், உத்தம ஆர்ஜவம், உத்தம சௌசம், உத்தம சத்தியம், உத்தம சம்யமம், உத்தம தவம், உத்தம தியாகம், உத்தம ஆக்ஞ்சன்யம், உத்தம பிரம்மசர்யம் என பத்து அறங்களைப் பற்றி சிந்தனைச் செய்யப்படுகிறது. எனவே இது பத்தற பருவம் எனவும் அழைக்கப்படுகிறது.

இத்தகு எடுத்துக்காட்டுகளால் பருவநாட்கள் ஆன்ம நலனுக்குத் தூண்டுதல் அளிக்கின்றன என்பது நன்கு விளங்குகிறது. இக்கருத்தினை நன்கு உணர்ந்து பருவம் மற்றும் பண்டிகையின் வேறுபாட்டினை அறிந்துகொள்ள வேண்டும்.

பண்டிகை நாட்களில் புலன் இன்பத்திற்கு வேண்டிய செயலுக்கு முதலிடம் அளிக்கப்படுகிறது அன்று ஏழை எளிய மக்களும் கூட சுவைமிக்க சிறந்த உணவை உண்பதிலேயே நாட்டம் கொள்ளுகின்றனர். ஆடம்பரமான ஆடை மற்று அணிகலன்களால் தம்மை அழகுபடுத்திக் கொள்ளுகின்றனர். மகிழ்ச்சியில் நேரத்தை கழிக்கின்றனர். பொங்கல், தீபாவளி, நவராத்திரி, முதலிய பண்டிகைகள் இதற்கு எடுத்துக்காட்டாக உள்ளன.

பருவம், பண்டிகை ஆகியவற்றிற்கு அமையும் இலக்கணத்தைப் புரிந்துகொண்டு "அக்ஷய திருதியை" பருவமா பண்டிகையா என்பதை முடிவு செய்யுங்கள். "அக்ஷய திருதியை" அன்று எவ்வித ஆடம்பரமும் புலன் இன்பத்திற்கு வேண்டிய செயலும் நிகழ்வதில்லை. அன்று கருணை,

கண்ணியம், கட்டுப்பாடு, தவ ஒழுக்கம், தானத்தின் சிறப்பு, தூயோர்கள் வரலாறு, முற்பிறவி நினைவு ஆற்றலால் நிகழ்ந்த நிகழ்ச்சி ஆகியவைகள் நினைவிற்கு வருகின்றன. ஆதலால் அந்த புனித நாள் "பருவ நாள்" என்பதில் ஐயமேயில்லை.

## அக்ஷய திருதியையின் சிறப்பு

உலகத்திலுள்ள எல்லா இனத்தவரும் பருவமும் பண்டிகையும் கொண்டாடுகின்றனர். பருவமும் பண்டிகையும் கொண்டாடாத மக்கள் எவருமில்லை, எல்லாப் பருவங்களும் பண்டிகைகளும் ஏதாவதொரு வரலாற்றினைக் கொண்டுள்ளது. இவற்றில் பெரும்பாலானவை மனித சமூகத்திற்கு ஏற்றம் கொடுபதற்கெனவும் தோன்றியதாகும், ஆனால் காலப் போக்கில் உண்மை தத்துவத்தின் சிறப்பினை மறந்து மக்கள் அவற்றை ஆடம்பர செயல்களுக்காகவே அமைத்துக் கொண்டனர்.

அக்ஷய திருதியை மிகப் பழமையான பருவம். அது தன் குணத்திலும், சிறப்பிலும், எவ்வித வேறுபாட்டினைக் கொண்டதில்லை. இப்பருவம் தவமும் தானமும் இணைந்த வரலாற்றின் கருத்தினை அறிவுறுத்துகிறது. தற்காலத்திலும் இக்கருத்தினை அடிப்படையாகக் கொண்டு அட்சயத் திருதியை கொண்டாடப்படுகிறது. பகவான் விருஷபதேவர் காலத்தில் எத்தகு சிறப்பும் கருத்தும் இப்பருவத்திற்கு இருந்தனவோ அதே சிறப்பும் கருத்தும், இன்றும் உள்ளன. அக்காலமுதல் இன்றுவரையுள்ள இடைவெளி காலத்தில் எண்ணிலடங்காத மாற்றங்களும் ஏற்றத்தாழ்வுகளும்

நிகழ்ந்துள்ளன. மன்னர்கள் ஆட்சியும் மக்கள் வாழ்க்கை முறையும், எவ்வளவோ மாற்றங்களைப் பெற்றுள்ளன. ஆனால் இப் பருவத்தில் சிறு துளி அளவு கூட மாற்றம் ஏற்படவில்லை. இப் பருவத்தின் கருத்தும் மாறவில்லை.

துன்பச் சுழலில் உழலும் உயிரினங்களுக்கு அளவு கடந்த அமைதியையும் குறைவு பெறாத சிறந்த குணங்களையும் உணர்த்தும் பருவம் "அக்ஷய திருதியை". யுகாதி புருடராகிய ஆதிபகவன் வரலாற்றினை வலியுறுத்தும் ஒப்பற்ற நிறைவு பெற்றதும் (அக்ஷய) அரிய செல்வம் போன்றதுமான ஜைன அறம் நிலைத்திருக்கும்வரை இப்பருவம் நிகழ்ந்துகொண்டே இருக்கும்.

பகவான் விருஷபதேவர் அக்ஷய திதியையன்று பலம் வாய்ந்த அந்தராய வினையைப் போக்கினார். சிரேயாம்ச குமாரர் தன்னுள் மறைந்திருந்த ஞானத்தை மறுபடியும் பெற்றார். இதைக் கண்ட மக்கள் ஒப்பற்ற மகிழ்ச்சியைப் பெற்றனர். இந்நாட்களிலும்கூட அக்ஷய திருதியையன்று ஆன்மீக இன்பத்தைப் பெறவும் ஆத்மா சாந்தியடையவும் பிறப்பு, மூப்பு இறப்பு ஆகிய பிணிகளிலிருந்து விடுபடவும் ஆவல் கொண்ட பவ்ய ஜனங்கள் மட்டுமே இப்புனித பருவத்தின் வழி நற்பலனை அடைவர்.

அக்ஷய திருதியை நிகழ்காலத்தில் நிகழ்ந்த முதல் பருவமாகும். இப்பருவம் ஏற்பட்ட பிறகுதான் மற்றைய பருவங்கள் ஏற்பட்டன. ஆதலால் இப்பருவத்திற்கு தனிச் சிறப்பு உண்டு.

இப்பருவத்திற்கு தனிச்சிறப்பு ஏற்படுவதற்கு தவமே முதற் காரணமாகும். மனதைக் கட்டுப்படுத்தி ஆன்மா தன்னுடைய இயற்குணத்தில் தோய்ந்து இருப்பதே உத்தம தவம். சலனமுள்ள மனம் தொடக்கமற்ற (அனாதி) காலத்திலிருந்து ஐம்புலன் இன்பங்களுக்கு அடிமையாகி இவ்வின்பமே பேரின்மெனக் கருதி வருகிறது. உண்மையும் மேன்மையும் அழிவின்மையும் உள்ள ஆம்மீக சுகத்தை இது சுவைக்கவில்லை. இதற்கு ஆன்ம இன்பத்தின் அறிமுகம் இல்லை. ஆதலால் இது நற்செயலில் ஈடுபாடு கொள்வதில்லை. இத்தகு தீய போக்கிற்கு கட்டுண்ட மனதை மாற்றி அதன் போக்கை ஆன்மீக தத்துவத்தில் செலுத்த பருவ நாட்கள் துணை புரிகின்றன.

மனம், வாக்கு உடல் இவை மூன்றின் செயலே யோகம் எனப்படும். இவைகளில் செயல் வினை ஊற்றுக்கு காரணமாகும். இவ்வினையை தடுப்பது இயலாத காரியமல்ல. மௌனம் ஏற்ற உடனே வாக்கின் செயல் தடைபட்டு விடுகிறது. வாக்கு கட்டுண்ட பிறகு உடலின் செயலைக் கட்டுப்படுத்துவது எளிது. ஆனால் நுண்பொறியாகிய மனதை கட்டுப்படுத்துவது எளிதல்ல. அனாதி காலமாக தொன்றுதொட்டு வந்துள்ள அதன் தீயச் செயலையும் சலனத்தையும் கட்டுப்படுத்த முயற்சி செய்தல் வேண்டும். வினைக் கட்டிற்கும் வினை உதிர்ப்புக்கும், முக்திக்கும் மனமே காரணமாகும். **மனம் ஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ** என ஒரு பழமொழியும் உண்டு. அதாவது வினைக் கட்டிற்கும், முக்திக்கும் மனமே காரணம் என்பதாம். மனம் கட்டுக்கடங்காதது எனக் கருதவேண்டாம். அது

கட்டுக்கடங்காதிருப்பின் முன்னோர்களும் அறவோர்களும் அதைக் கட்டுப்படுத்தி தவம் செய்து முக்தி பெற்றிருக்க முடியுமா? பண்டைய காலந்தொட்டுப் பல யோகிகள் போகத்தைத் துறந்து மனதைக் கட்டுப்படுத்தி யோக நிலையடைந்து வினைதனை வென்றனர். என்கிற வரலாறு நம் ஆகமங்களில் நிறைந்துள்ளன. அவர்களுடைய ஒழுக்க நெறிகளை உணர்ந்து ஆசை, வெகுளி, மயக்கம், உலோபம் ஆகியவைகளை விட்டு முன்னோர்கள் சென்ற அடிச்சுவட்டில் சென்று மனதை அடக்கலாம். பருவம் மனதை கட்டுப்படுத்தி தூயவழியில் ஒழுகும் நிலையைக் காட்டுகிறது. நல்வழிநடந்து ஆன்மீக இன்பத்தைப் பெற முயல்வது ஒவ்வொருவருடைய தலையாய கடமையாகும்

## வர்ஷி தவம்

மூவுலகிற்கும் ஒப்பற்ற தலைவராக உள்ள விருஷப தேவர் உலக மக்களுக்கு வாழ வழிவகைகளை அறிவித்து தனது மூத்த புதல்வர் பரதனுக்கு முடிசூட்டி தன்னுடைய ஆன்ம நன்மையை தேடிக்கொள்ள வீட்டைவிட்டு வெளியேறினார். அவர் சித்திரைத் திங்கள் தேய்பிறை ஒன்பதாம் நாள் (நவமி அன்று) தீட்சைப் பெற்றார். அன்று முதல் அவர் முழுதுணர் ஞானத்தையும், பேரின்பத்தையும் பெறுவதற்கு அல்லும் பகலும் அயராது தவமியற்றினார். அவருடைய உள்ளம் உயர்ந்த நிலையை எய்தியது. அவருடைய குறிக்கோளும் உயர்ந்ததாகவே இருந்தது. புறப்பற்றும் அகப்பற்றும் அவரிடமிருந்து அடியோடு பறந்தோடின. பசி, தாகம், வெப்பம், குளிர் யாவற்றையும் பொருட்படுத்தாமல்

தவக்கோலத்தில் நின்றவண்ணம் ஆன்ம குணத்தில் தோய்ந்திருந்தார். நின்று கொண்டு தவம் செய்வதிலும், கண்விழிப்பதிலும் அவருக்கு எவ்வித சோர்வும் இல்லை. ஆன்ம தியானத்தில் ஈடுபட்ட பிறகு நாட்கள், வாரம், பக்ஷம், மாதம் ஆகியவை பல கடந்தன. இருந்தபோதிலும் அவர் முகத்தில் எள்ளளவும் சோர்வு ஏற்படவில்லை. அவர் ஒரு ஆண்டு, ஒரு மாதம், பதினோறு நாட்கள் வரை அன்னம் நீர் இல்லாமல் தவத்திலேயே ஆழ்ந்து இருந்தார்.

விருஷபதேவருக்கு அந்தராயம் என்னும் வினை உதிர்ப்பு ஏற்பட்டது. மற்றும் சிரேயாம்ச குமாரருக்கு முற்பிறவி நினைவும் வந்தது. அவர் துறவியர்களுக்கு ஆகாரம் அளிக்கும் விதிமுறைகளை உணர்ந்தார். அதே நேரத்தில் விருஷபதேவர் அவர் 400 நாட்கள் தவம்செய்து பிறகு வைசாக மாதம் வளர்பிறை திருதியையன்று சிரேயாம்சகுமாரர் மாளிகை எதிரிலே ஆகாரம் ஏற்க வந்துள்ளார்.

அவர் சைத்திர மாதம் தேய்பிறை நவமியன்று தவம் ஏற்றார். ஒரு ஆண்டு கழிந்த பிறகு வைசாக மாதம் வளர்பிறை திருதியையன்று ஆகாரம் ஏற்றார். இந்தக் கணக்குப்படி அவர் 400 நாட்கள் வரை அன்னம் நீர் ஆகிய உணவு இல்லாமல் இருந்தார். அந்தராய வினையை களைந் தெறிய அவருக்கு இவ்வளவு நாட்கள் ஆயின.

வினை மிகவும் பலம் வாய்ந்தது. வினையின் விளையாட்டு யாரையும் விட்டபாடில்லை. பெரியோர், சிறியோர், ஏழை எளியவர், செல்வந்தர், ஆகிய எவருக்கும் வினை சலுகை காட்டுவதில்லை. எல்லா வினைகளும், தத்தம் பலனை

அளித்தே தீரும். விருஷபதேவர் மூன்று உலகிற்கும் பகவானாக ஆகக் கூடியவர். தேவர்களாலும் மனிதர்களாலும் போற்றி பாராட்டப்பட்டவர். தீர்த்தங்கர நாம வினை என்னும் புனித வினைக்கட்டினையடைந்தவர். இருந்தபோதிலும் அவரிடம் அந்தராய வினை தன் வலிமையைக் காட்டியது. வினை ஜடப்பொருள், ஆன்மா சைதன்யப் பொருள். ஜடப் பொருளைக் காட்டிலும் சைதன்யப் பொருளுக்கு வலிமை அதிகம் உண்டு. சைதன்ய குணமுள்ள ஆன்மா தவ வலிமையால் ஜடப் பொருளாகிய வினையை வெல்லுகிறது. விருஷபதேவர் தம் தவவலிமையால் அந்தராய வினையை சுட்டெரித்தார். வினை வீழ்ச்சியடைந்தது. சைதன்ய ஆன்மா ஏற்றமடைந்தது.

அன்பர்களே ! வினையின் வலிவு அதிகம் எனக் கருதி நீங்கள் வினைக்கு அடிமையாகுதல் வேண்டாம். எல்லாம் வினையின் செயல் எனக்கூறி எல்லாப் பொறுப்பையும் அதன் மீது விட்டுவிடுவது மித்யாத்வம் (பொய்மையும்) அறியாமையும் ஆகும். பொய்மையையும், அறியாமையையும் அகற்றி ஆன்ம வலிமையைப் பெற அயராது முயல்வது ஒவ்வொரு உயிரின் கடமை என்பதை மறவாதீர்கள். விருஷபதேவர் ஒழுகிய ஒழுக்கத்தையும் துறவையும் தவத்தையும் நாம் எப்பொழுது ஏற்போம் என்கிற எண்ணம் கொண்டவராக ஒவ்வொருவரும் இருத்தல் வேண்டும். இத்தகு எண்ணம் கொண்டு அதைப்பெற முயல்வீர்களானால் எப்பொழுதாவது அது உங்களுக்கு நிறைவேறக்கூடும்.

அக்ஷய திருதியை ஒரு பருவநாள் என்று அறிந்தோம். விருஷபதேவர் ஆகாரம் ஏற்றற நாள் முதற்கொண்டு மக்கள்

"வர்ஷிதவம்" என்னும் ஒரு விரதத்தை கடைப் பிடிக்கலாயினர். பருவம் என்பதற்கு விரதம் என்கிற பொருள். இந்த விரதத்தை கடைப்பிடித்த மக்கள் பலர் அந்தராய வினையைப் போக்க முற்பட்டனர்.

விருஷபதேவர் வாழ்ந்த காலம் சிறந்த வல்லமைப்பெற்ற காலமாக இருந்தது. அப்பொழுது வாழ்ந்த மக்களும் கூட சிறந்த உடற்கட்டினையும், அதிக பலத்தைப் பெற்றவர்களாகவும் இருந்தனர். அவர்களுடைய உள்ளத்தில் தூய்மை இருந்தது. விருஷபதேவர் தீர்த்தங்கரராக வரக்கூடியவர். சாதாரண மக்களைக் காட்டிலும் பல சிறந்த குணங்களையும் அதிக வலிமையையும் பெற்றவர். அவர் 400 நாட்கள்வரை எவ்வித சோர்வுமின்றி உபவாசம் இருந்தார். அனசன தவத்தை ஏற்றவராகவும் வினைதனை வீழ்த்துவதில் நாட்டம் கொண்டவராகவும் இருந்தார். அவரைப் பின் பற்றிய மக்கள் அவர் இருந்த தவத்தின் பெயரில் "வர்ஷிதவம்" செய்யலாயினர்.

சைத்திர மாதம் தேய்பிறை (கிருஷ்ணபஷம்) அஷ்டமியன்று "வர்ஷிதவம்" ஆரம்பிக்க வேண்டும். 13 மாதம் 11 நாட்கள் கழிந்த பிறகு வைசாக மாதம் வளர்பிறை (சுக்லபட்சம்) திருதியையன்று தவத்தை முடிக்க வேண்டும். இந்த விரதம் ஏற்றவர்களுக்கு விரதம் ஏற்றநாள் முதல் ஒருநாள் உபவாசம், மறுநாள் பாரனை செய்யும் விதிமுறை உண்டு. இதுபோலவே 13 மாதம் 11 நாட்கள் வரை ஒருநாள் உபவாசம், மறுநாள் பாரனை செய்துக் கொண்டே வரவேண்டும். விருஷபதேவர் கருப்பஞ்சாறு பருகி பாரனை செய்தார். வர்ஷிதவத்தை ஏற்றவர்களும்கூட தவத்தை முடிக்கும் நாள் அன்று கருப்பஞ்சாறு பருகி பாரணை செய்ய வேண்டும்.

விருஷபதேவர் ஒப்பற்ற சக்தி பெற்றவர். அவருடைய உடற்கட்டும், அவரிடமிருந்த குணங்களும் ஒப்பற்றவை, அவர் பாரணையன்று 108 குடங்களில் நிரம்பிய கருப்பஞ்சாற்றை கைகளில் ஏற்று 108 முறை பருகினார். ஆனால் இந்நாட்களில் உள்ள மக்கள் அவரைப் போன்று வலிமை பெற்றவர்கள் அல்ல. ஆதலால் 108 குடங்கள் நிரம்பிய கருப்பஞ்சாற்றை இவர்களால் பருகமுடியாது. ஆனால் தத்தம் சக்திக்கு ஏற்றவாறு சிறிய பாத்திரத்தில் நிரப்பி 108 முறை பாரணை செய்யலாம்.

இந்த விரதம் ஏற்ற நாள்முதல் விரதம் முடிக்கும் நாள் வரை "ஸ்ரீ விரஷபாய நம:" என்கிற மந்திரத்தைச் சொல்லி ஜபம் செய்ய வேண்டும்.

அந்தராய வினையை வெல்லுவதும், முக்திக்கு வழியாகிய நற்காட்சி நல்ஞானம் நல்லொழுக்கம் என்னும் மும்மணிகளைப் பெறுவதும் வர்ஷிதவத்தின் நோக்கமாகும். மும்மணியைப் பெறுவதே ஆன்ம குணத்தைப் பெறுவதாகும். அத்துடன் போகப் பொருட்களின்மீது பற்று இருத்தல் கூடாது. மேலும் பாவத்திற்கு காரணமாகிய பதினெட்டு செயல்களைச் செய்யக் கூடாது. இவைகளைத் தவிர கீழ்க்கண்ட உத்தம நியமங்களையும் கடைபிடிக்க வேண்டும்.

1. காலையிலும், மாலையிலும் சாமாயிகம் மற்றும் பிரதி கிரமணம் செய்ய வேண்டும்.

2. தினசரி உபயோகப்படுத்தும் பொருட்களின் தேவையை குறைத்துக் கொள்ளவேண்டும்.

3. காலை, மதியம், மாலை மூன்று வேளைகளிலும் பகவானை துதி செய்ய வேண்டும்.

4. தரையில் உறங்க வேண்டும். கட்டில், மெத்தை போன்ற பொருட்களை உபயோகப்படுத்தக் கூடாது.

5. உலர்ந்த பழவகைகளையும் வேகவைத்த பொருட்களை மட்டும் உண்ண வேண்டும்.

6. துறவியர் இருப்பின் அவர்களிடம் சென்று அறம் கேட்க வேண்டும்.

7. துறவியர் இல்லாதபோது அறநூல்களை வாசித்து நல்ஞானம் பெறவேண்டும். அறிஞர்களுக்கும் அறவோர்களுக்கும் மரியாததை செய்து அவர்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும். தத்துவ சர்ச்சையிலேயே நேரத்தைக் கழிக்கவேண்டும்.

---

பாவத்திற்குக் காரணமாகிய பதினெட்டு செயல்கள் :

1. கொலை 2. பொய் 3. களவு 4. காமம் 5.பேராசை 6. சினம் 7.கர்வம் 8. மாயை , (புரட்டு) 9.லோபம், கஞ்சத்தனம் 10. பொருட்பற்று 11. த்வேஷம் 12. கலகம், சண்டை 13. பொய் குற்றச்சாட்டு 14. கோள் சொல்லுதல் 15. களவுக்குத் துணை புரிதல் 16. புலனாசையில் அதிக ஆவல் கொள்ளுதல் 17.பொய்யை மெய்யாக நம்புதல் 18. பொய் பிரச்சாரத்திற்கு துணை புரிதல் என

8. விரதம் ஏற்ற நாள் முதல் அதை முடிக்கும் நாள்வரை பிரம்மசர்யத்தை கடைப்பிடிக்க வேண்டும்.

9. காமம், வெகுளி, மயக்கம் ஆகியவைகளை தோற்றுவிக்கக் கூடிய அல்லது வளர்க்கக் கூடிய செயல்களைச் செய்யக்கூடாது.

10. தீயவர் தொடர்பினைக் கொள்ளாமல் நல்லோர் அறிஞர் ஆகியோருடன் தொடர்பு கொள்ளவேண்டும்.

11. தவத்திற்கு பொறையுடைமை தேவை. இஃது இல்லை எனில் சினம் வளரும். சினத்தைப்போக்க சகிப்புத்தன்மை இன்றியமையாதது. அத்துடன் சமத்துவம் சமாதானத்துவம், கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவைகளும் தேவை.

12. உலகியல் இன்பத் தொடர்பினை அறுத்து அறச்செயலில் ஈடுபாடு கொண்டு சம்ரம்பம், சமாரம்பம், ஆரம்பம் என்னும் செயலை விடவேண்டும், (பிறவிச் சுழலுக்குத் துணை புரியும் செயலைச் செய்ய சிந்திப்பது சம்பரம்பம். அதற்கு வேண்டிய உபகரணங்களைச் சேகரிப்பது சமாரம்பம்; செயலைத் துவங்குவது ஆரம்பம் எனப்படும்).

13. பாரணை நாள் அன்று சாதாரண உணவை உண்ண வேண்டும். நாக்கு ருசிக்காவும், சத்துணவு எனக் கருதியும் உணவுப் பொருட்கள் மீது அதிக ஆவல் கொண்டும் அளவிற்கு அதிகமாகவும் உண்ணக் கூடாது.

14. அறச் செயலில் விழிப்பின்மை கூடாது. அறப்பணியில் மனநிறைவுடன் ஈடுபாடு கொள்ளவேண்டும்.

15. பிற உயிரினங்களுக்கு எவ்வித இன்னலையும் விளைவிக்கக் கூடாது ; பிறருக்கு உதவி செய்வதே பேரின்பம் எனக்கருதி தன்னால் இயன்றளவு பிறருக்கு உதவி செய்ய வேண்டும்.

16. புறத்தியாகத்துடன் அகத்தியாகமும் அவசியம் தேவை, மனத்தூய்மை கொண்டு காமம் வெகுளி மயக்கங்களை விடுவதே அகத்தியாகமாகும்.

பகவான் விருஷபதேவர் தம் வாழ்க்கையில் கடைபிடித்த கட்டுப்பாட்டினை நாமும் கடைபிடிப்பதே வர்ஷிதவத்தின் நோக்கமாகும். அத்துடன் தூய எண்ணத்தை மேன்மேலும் வளர்க்க வேண்டும்.

ஆன்ம நன்மைப்பெற விரும்பும் உயிர்கள் மற்ற எல்லா உயிரினங்களையும் தன்னைப் போன்று கருத வேண்டும். உலகப் பொருட்கள் யாவுமே நிரந்தரமாக இருப்பதில்லை. நாமும் என்றென்றும் நிலைத்து இருப்பவர் அல்லர். ஆதலால் மனச்சல்யம் (மன உறுத்தல்) புலன் ஆசை ஆகியவைகளை விட்டு மனத்தூய்மை பெற்று முக்தியுலகை அடைய வேண்டும் என்கிற எண்ணம் கொண்டு ஒழுகினால் தான் புறச்செயலில் பலன் உண்டு. மனத்தூய்மை ஏற்படின் ஆன்ம அமைதியும் ஆனந்தமும் உண்டு.

வர்ஷிதவம் ஒரு பட்டினித் தவமே. பட்டினி இருப்பது புறத்தவமாகும். புறத்தவம் அகத்தவத்திற்குத் துணை. மனமில்லாத எந்த புறச் செயலும் சிறந்த பலனை அளிக்காது. வர்ஷிதவத்தைக் கைகொண்டவர்கள் மனத்தூய்மை பெற முழுதளவும் முயல வேண்டும். பட்டினி (உபவாசம்) இருப்பதினால் மட்டும் ஆன்மா தூய்மைபெற்று விடாது. அனசன (பட்டினி) தவம் உணர்வுவேகத்தைக் குறைக்கிறது. இது மனத்தூய்மைக்கும் ஆன்ம அமைதிக்கும் துணைபுரிகிறது. புலன்களின் உணர்வு வேகத்தை குறைத்து மனதை தூய்மைபடுத்தி ஆன்ம சுத்தி பெறுவதே இத்தவத்தின் குறிக்கோள்.

புறத்தவம் சாதனம்; அகத்தவம் சாத்தியம்; சாதனத்தை கடைபிடித்து சாத்தியத்தைப் பெறவேண்டும். புறத்தவமாகிய வர்ஷிதவம் சாதனம். அகத்தவமாகிய ஆன்மசுத்திசாத்தியம் என்பதை உணர்ந்து வர்ஷிதவம் செய்வதால் பலன் உண்டு.

பாரத கலாசாரத்தில் தவத்திற்கு தனிச் சிறப்புண்டு ஆன்மா தூய்மைபெற தவம் ஒரு கருவியாகக் கருதப்படுகிறது துறவியரும் இல்லத்தாரும் கடைபிடித்த தவத்தின் பெருமை இந்திய வரலாற்றில் முதலிடம் பெறுகிறது. வேத நூல்களும் கூட தவத்தின் மேன்மையை கூறாமல் இல்லை. "தமோ நாநசநாத்பரம்" அனசன (உபவாச) தவத்தைக் காட்டிலும் சிறந்த தவம் யாதும் இல்லை என பகவத் கீதை கூறுகிறது. ஆனால் ஜைன நூல்களில் தவத்திற்கு எவ்வளவு சிறப்பும் மேன்மையும், வலிமையும், விதிமுறைகளும், உட்பிரிவுகளும் கூறப்பட்டுள்ளனவோ அவ்வளவு வேறு மதநூல்களில் காண முடியாது. இதில் விஞ்ஞான முறைப்படி ஆய்வுசெய்து

கூறப்பட்டுள்ளது. மேலும் தவத்திற்கு அகத்தூய்மையும் அகக்காரணங்களும் மிக அவசியமென வலியுறுத்தப் பட்டுள்ளது. புறக்காரணமாகிய உடற்பற்றையும் ஐம்புலன்களின் உணர்வையும் மட்டும் குறைப்பது தவமாகாது. தியானமும் சுவாத்தியாயமும் தவம் எனவும் இவை வினை உதிர்ப்புக்கெனவே செய்யப்படுகின்றன எனவும் கூறப்பட்டுள்ளது.

ஆன்மாவுடன் வினைத் தொடர்பு அநாதி (தொடக்கமற்ற) காலமுதற் கொண்டு இருந்து வருகிறது. ஆனால் அவ்வினையைப் போக்க தொடக்க காலம் உண்டு. அதுதான் தவமும், தியானமும் செய்யத் துவங்குவாதற்கான தவக்கோலம் ஏற்கும் நேரமாகும்.ஆகும். வினையைப் போக்காமல் முக்தி பெறமுடியாது. அவ்வினையைப்போக்க தவம் முதற்காரணமாக அமைகிறது.

"மலம் ஸ்வர்ணகதம் வந்ஹி ஹம்ச க்ஷீர கதம் ஜலம்
யதா ப்ரதக் கரோத்யேவம் ஜந்தோ கர்மமலம் தபம்"

தங்கத்திலுள்ள அழுக்கினை நெருப்பு விலக்குகிறது பாலில் கலந்த நீரை அன்னப்பறவை பிரித்தெடுக்கிறது அதுபோலவே உயிரோடு இணைந்துள்ள வினையை தவம் விலக்குகிறது.

ஜைன கோட்பாட்டைச் கடைபிடித்த அறவோர்களும் துறவியரும் மகான்களும் பெரிய பெரிய தவங்களைச் செய்துள்ளனர். பகவான் மகாவீரரும்கூட தவம் செய்துதான் வினையை வென்றார். யாவரும் தத்தம் சக்திக்கு ஏற்ற தவமும் தியானமும் செய்தல் வேண்டும். ஆன்மாவை தூய்மைபடுத்த

ஆர்வம் கொண்ட அன்பர்கள் தவம் செய்வது அன்றாட கடமைகளில் ஒன்று எனக் கருதவேண்டும்.

விருஷபதேவர் உலகத்தந்தை; ஒப்பற்ற செல்வப்பெருமகன்; அமரர்களால் பூஜிக்கப்பட்ட ஆன்மா, ஆறு தொழில்களை மக்களுக்கு கற்பித்த பிரம்மா; தூய துறவி; இல்லற துறவற நெறிகளை பொதித்த ஆசான், இதுபோன்ற பல அமைப்புகளை அவர் பெற்றபோதிலும் அவைகள் இவரை அந்தராய வினையிலிருந்து விடுவிக்க முடியவில்லை; ஆனால் இவர் தன்னுடைய தவ வலிமையினால்தான் வினையை விடுவித்தார் ஆன்மா தன் வினையை தானேதான் வெல்லவேண்டும் என்பதை இங்கு வர்ஷிதவத்தை அடிப் படையாகக் கொண்ட அக்ஷய திருதியை வலியுறுத்துகிறது.

எல்லோரையும் ஆட்டிப்படைக்கும் வினை நிரந்தரமாக இருக்கக்கூடியது அல்ல. எண்ணிலடங்காப் பிறவிகளில் சேகரித்த வினை தவத்தின் வழி போகக்கூடும். அதற்கு முயற்சி தேவை, முயற்சிக்கு புருஷார்த்தம் என்பர். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய இந்நான்கும் புருஷார்த்தம் எனப்படும். இந்நான்கில் கடைசி நிற்பது வீடு (மோஷம்). இதுதான் என்றென்றும் நிரந்தரமாக குறைவு பெறாமல் நிறைவுபெற்று நிலைத்து இருக்கக் கூடியது. தவத்தின் வழிதான் இதைப்பெற முடியும்.

பலனைக் கருதி தவம் செய்யக் கூடாது. பலனைக் கருதி செய்யும் தவம் தூய்மையற்றதாக ஆகிவிடும். தவத்தில் தூய்மையும், விருப்பமின்மையும் தேவை. விருப்பம் (ஆசை) மயக்கத்தை ஏற்படுத்திவிடும். மயக்கத்தினால் மாசுபடிந்த

பலன்தான் உண்டு. இதனால் ஆன்மீக இன்பம் கிடைக்காது. ஆன்மசுத்திக்காகவே தவம் செய்ய வேண்டும். செய்கிற தவத்திற்கு பலன் அவசியம் உண்டு. உலக இயலான இன்பத்தை விரும்பி செய்யும் தவமும் அல்லது வேறு ஏதாவது ஆசை கொண்டு செய்யும் தவமும் வியாபாரம் போன்றதாகும். அறச் செயலில் வியாபார நோக்கம் கூடாது. எவ்வித ஆசையும் இல்லாமல் செய்கிற தவமே அழியா இன்பத்தை அளிக்கவல்லது.

அக்ஷய திருதியை தவத்தின் நினைவுச் சின்னம் போல தானத்தின் நினைவுச் சின்னமுமாகவும் விளங்குகிறது. தானம் தன்னுடைய மற்றும் பிறருடைய நன்மைக்காகவே செய்யப் படுகிறது. எந்தப் பொருள் தானமாக அளிக்கப் படுகிறதோ அப்பொருள் மீதிருந்த ஆசை விலகுகிறது. எவ்வெளவுக் கெவ்வளவு ஆசை விலகுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு ஆன்மாவில் ஏற்படும் சஞ்சலம் குறைகிறது. சஞ்சலம் குறையக்குறைய ஆன்மீக அமைதி வளர்கிறது. அமைதி வளர வளர ஆன்ம இன்பம் பெறப்படுகிறது.

தவத்தைப் போன்று தானமும் சிறந்ததே. பொருட் செல்வம் படைத்தவர் தானம் அவசியம் செய்ய வேண்டும். வசதியற்றவர்கள் தவத்தை கைவிடக் கூடாது. தானம், தவம், சீலம் , தூய எண்ணம் ஆகிய நான்கும் அறத்தின் அங்கங்களாகும். இவைகளின் வழி முக்திப் பாதையையடைய முடியும். நற்காட்சி. நல்ஞானம், நல்லொழுக்கம் இம்மூன்றுமே முக்திக்கு வழியாகும் இதற்கு தானம், தவம், சீலம், தூய எண்ணம் ஆகியவை துணை புரிகின்றன. ஆதாலால் இவற்றின் மீது நாட்டம் கொண்டு நடப்பவர் நற்பலனைப் பெறுவர்.

தானப் பலன் தானமாக வழங்கும் பொருட்களைச் மீது சார்ந்தது அல்ல. அதாவது பெரிய பொருளை தானமாக அளிக்கும்போது அதிக பலனும் சிறிய பொருளை அளிக்கும் போது குறைந்த பலனும் உண்டு எனக் கருதக் கூடாது. தானம் கொடுக்கும் பொருள் நிமித்தமாத்திரமாகும். தானத்தின் பலன் தானம் கொடுப்பவரின் எண்ணத்தைச் சார்ந்துள்ளது. இதற்கு எடுத்துக்காட்டாக சந்தனை மங்கை மகாவீர மாமுனிவருக்கு தன்னிடம் இருந்த கஞ்சியை ஆகாரமாக அளித்தாள். அதன் பயனால் அவளுக்கு ஒப்பற்ற பலன்கள் கிடைத்தன. அவளுக்கு பூட்டப்பட்ட கை. கால் விலங்குகள் யாவும் தன்னம்தானாகவே தவிடுபொடி ஆகின. மகாவீர மாமுனிவருக்கு அளிக்கப்பட்ட தானத்தின் மகிமையால் அமரர்கள் வந்து அமர ஒலி எழுப்பி மலர்மாரி பொழிந்தனர். அவள் அடிமைத்தளையிலிருந்தும் விடுபட்டால். இவை எல்லாம் அவள் கொடுத்த கஞ்சியின் பலன் அல்ல. அவள் உள்ளததே தோன்றிய தூய எண்ணமும் மகாமுனிவர் மீது கொண்ட அசையா நம்பிக்கையுமே ஆகும். தானகர்த்தாவை ஏற்றமுறச் செய்வது அவரவர் உள்ளத்தே தோன்றும் தூய எண்ணமும், நன் நம்பிக்கையுமேயாகும். செல்வம் படைத்தவர் கொடைத்தன்மை படைத்தவராக இருக்க வேண்டும். தானம் வழங்குவதில் கஞ்சத்தனம் கூடாது. இல்லறத்தார் எப்பொழுதும் சம்ரம்பம், சமாரம்பம், ஆரம்பம் ஆகியவற்றில் ஈடுபட்டு வருகின்றனர். இப்பணிகளால் பாவம் அவசியம் ஏற்படுகிறது. அப்பாவத்தைப் போக்க தங்களால் இயன்றளவு தானமும், தவமும், செய்தல் வேண்டும். தானம் வழங்குபவர் தானகர்த்தா எனவும், தானத்தைப் பெறுபவர் பாத்திரம் எனவும் கூறப்படுவர். பாத்திரத்தில் உத்தமபாத்திரம்

மத்திமபாத்திரம், அதமபாத்திரம் என மூவகை உண்டு. முற்றும் துறந்த துறவியர் உத்தம பாத்திரமாவர். சம்யக்த்ருஷ்டி ஜீவனும் விரதத்தைக் கடைபிடித்து ஒழுகும் இல்லறத்தாரும் மத்திம பாத்திரமாவர். அறத்தையும், நன்மை தீமையையும் அறியாத பாமரமக்கள் அதம பாத்திரமாவர். உத்தம பாத்திரத்திற்கு வழங்கும் தானம் தலை சிறந்த தானம் ஆகும்.

உறவியைப் பெரிதுமோம்பி யொழுக்கத்தை நிறுத்தியுள்ளம்
பொறிவழி படர்ச்சி நீக்கிப் பிறர்க்குநன் றாற்றிப் பொய்தீர்
நெறியினைத்தாங்கி நீங்கா வீட்டின்பம் விழைதல்செய்யு
முறுதவர்க் கீந்தவெல்லா முத்தம தான மாமே.

(மேருமந்திரபுராணம் 352)

ஜீவன்களுக்கு தம்மால் எவ்வித இன்னல்களும் ஏற்படாதவாறு நடந்து பாதுகாத்து சாமாயிகம் முதலிய ஒழுக்க நெறிகளை கடைபிடித்து மனதை ஐம்புலன் இன்பத்திலிருந்து நீக்கி பிறருக்கு நன்மையே செய்து மும்மணிகளைத்தரித்து அழியா இன்பமாகிய முக்தி சுகத்தை சாதிப்பதில் நாட்டம்கொண்டு பெரிய தவத்தைச் செய்யும் மகாமுனிவர் களுக்கு கொடுக்கும் தானம் உத்தம தானம் எனப்படும்.

உலகத்தில் உள்ள என்பத்து நான்கு இலட்சம் பிறவிகளில் (யோனி பேதங்களில்) மனிதப் பிறவி கிடைப்பது எளிதல்ல. மிகமிகக் கடினமாகவும் அறியதாகவும் கிடைக்கக் கூடிய மனிதப் பிறவியைப் பெற்றவர் தங்கள் வாழ்நாளை நல்லறச் செயலிலும் தூய சிந்தனையிலும் செலுத்தி தான் பெற்ற

நற்பிறவியை பயனுள்ளதாக்கிடும் வண்ணம் செய்து அதன்வழி நற்பலனைப் பெறுவதற்கு தானமும் தவமும் சிறந்த கருவிகளாகும்.

தவம் பலவகைப்படும், அதில் வர்ஷி தவம் ஒன்று. தவத்தைச் செய்து தன்னகத்தே பொதிந்து இருக்கும் இரத்னத் திரயத்தை (மும்மணியை) அக்ஷயமாக (குறைவின்றி) பெற்று அக்ஷய சுகமாகிய முக்தி சுகத்தைப் பெற வேண்டும் என்னும் நற்செய்தியை அக்ஷய திருதியும் வர்ஷீ தவமும் அறிவிக்கின்றன.

"திங்கள் மும்மாரி பெய்க திருவறம் வளர்க செங்கோல்
நன்கினிதரசனாள்க நாடெலா செழிக்க மற்றும்
எங்குள அறத்தினோரும் இனிதூழி வாழ்க எங்கள்
புங்கவன் பயந்த நன் நூல் புகழுடன் பொலிகமிக்கே "

# அருகன் துதிமாலை

## 1. திருத்தக்கதேவர் தரும் துதிமாலை

### சித்த சரணம்

1. மூவா முதலா உலகம் ஒருமூன்றும் ஏத்த,
   தாவாத இன்பம் தலையாயது, தன்னின் எய்தி,
   ஓவாது நின்ற குணத்து ஒள்நிதிச் செல்வன் என்ப-
   தேவாதி தேவன்; அவன்சேவடி சேர்தும் அன்றே.

குறிப்புரை :

1. சீவகசிந்தாமணி, 1. சித்தசரணம்- சித்தனை வணங்கும் வணக்கம். சித்தன் ஆவான் காதி அகாதி என்னும் இருவகைக் கருமங்களையும் வென்று பரிநிர்வாணம் பெற்று மூவுலகத்து உச்சியில் இருப்பவன். மூவா முதலா உலகம் - அந்தமும் ஆதியும் இல்லாத உலகம் ; உலகம் மூன்று-மேலுலகம், நடு உலகம், கீழுலகம்; உலகம் ஆக்கப்படாதது என்பது சைன மத சித்தாந்தம் ; தாவாத-கெடாத; தலையாயது - ஒப்பற்றது, சிறந்தது; தன்னின் எய்தல் - தன்னால் பெறுகை," தன்னில் எய்தி" என்றும் பாடம் உண்டு ; அதற்கு மணியினது ஒளியும் மலரினது நாற்றமும் போலத் தன்னுள்ளே பெறுதல் என்பது பொருள். ஓவாது-விட்டு நீங்காது; ஒள் நிதிச் செல்வன்- வீடாகிய விளங்கிய நிதியையுடைய செல்வன்; தேவா திதேவன் - தேவர்களுக்கு முதல்வனாகிய கடவுள் ; சேவடி சேர்தும் - திருவடிகளை வணங்குவோம்.

## 2. தோலாமொழித் தேவர் கண்ட துதிமாலை

### அருக சரணம்

1. வென்றான், வினையின் தொகையாய-விரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த உணர்வின் ஒழியாது முற்றும்
சென்றான் - நிகமும் சுடர்சூழ் ஒளிமூர்த்தி ஆகி
நின்றான்,-அடிக்கீழ்ப் பணிந்தார் வினை நிங்கி நின்றார்.

### 2. சூளாமணி

குறிப்புரை :

1. சூளா. 1. வினையின் தொகை -ஞானாவரணீயம், தரிசனாவரணீயம், வேதநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்த ராயம் என்னும் எண் வகையான கர்மங்களின் கூட்டம். இவை எட்டும் காதி, அகாதி என இருவகைப்பட்டு நூற்றெட்டாக விரியும் என்பர். அருகன் வினை வென்றமையால் சினேந்திரன் என்னும் பெயர் பெற்றான். ஒழியாது - நீங்காது; சுடர்சூழ் ஒளிமூர்த்தி-சூரிய சந்திரர் போல ஒளி மயமாகத் திகழும் கடவுள் ; வினை- நல்வினை, தீவினைகள்.

## 3. நீலகேசி

### பஞ்ச பரமேட்டிகள் வாழ்த்து

(முதல் இரண்டு செய்யுளும் குளகம்)

1. நல்லார் வணங்கப் படுவான் பிறப் பாதி நான்கும்
இல்லான் உயிர்கட்கு இடர்நீர்த்துஉயர் இன்பம் ஆக்கும்
சொல்லான் தருமச் சுடரான்எனும் தொன்மை யினான்
எல்லாம் உணர்ந்தான் அவனேஇறை யாக ஏந்தி

## 3. நீலகேசி

குறிப்புரை :

1. நீல. 1. . நல்லார்-முனிவர், தேவர், மக்கள் முதலியோர் ; வணங்கப்படுவான் - உலகிற்கு ஒரு பெரும் தெய்வம் என்று போற்றப் படுவான் ; பிறப்பு ஆதி நான்கும்-பிறப்பு, மூப்பு, மரணம், நோய், ஆன்மாவின் இயல்பான குணங்களை மறைக்கும் காதி கர்மங்களை ; இன்பம் ஆக்கும்-சுகத்தைக் கொடுக்கும். சொல்லான்-திருமொழியையிடையவன் ; தருமச் சுடரான்-தரும சூரியன் ஆனவன் ; தொன்மையினான்-ஆதியும் அந்தமும் இன்றி நித்தியன் ஆனவன் ; எல்லாம் உணர்ந்தான்-பொருள் குணம் தோற்றங்களைக் கண்கூடாக உணர்ந்த கடையிலா அறிவுடையான் ; அதனோடு கடையிலாக் காட்சி ; கடையிலா வீரியம், கடையிலா இன்பம் ஆகியவற்றையும் உடையான் ; இறை - சுவாமி ; ஏத்தி-துதித்து.

## சித்த நன்னெறி பயந்தான் திருவடிக்கு அருச்சனை

1. கன்று காலனைக் கடந்தாய்

காதற் காமனைக் கடிந்தாய்!

தொன்று மூத்தலைத் துறந்தாய்!

தோற்ற மாக்கடல் இறந்தாய் !

ஒன்ற நோய்பகை ஒருங்கே

உடைந்து வெங்களத்து உதிர

வென்று இருந்தனை நீயே !

வீரர்தம் வீரர்க்கும் வீரா !

குறிப்புரை :

நீல. 154. கன்றுதல்-சினத்தல் ; காலன்-யமன் ; கடந்தாய் வென்றாய் ; காதற் காமன்-இன்பவுணர்வினை எழுப்பும் மன்மதன் கடிந்தாய்-போக்கினாய் ; தொன்று-பழமை; மூத்தல்-மூப்படைதல்; தோற்றமாக்கடல்-பிறவிப் பெருங்கடல்; இறந்தாய்-கடந்தாய்; ஒருங்கே-ஒருசேர; உடைந்து-பிறந்து; உதிர-சிதற; வீரன் -வெற்றி பெற்றவன், ஜிநன்.

## அனந்த குணக்கடல்

1. உலகம் மூன்றும் ஒருங்குஉணர் கேவலத்து
அலகு இலாத அனந்த குணக்கடல்-
விலகி வெள்வினை. வீடு விளைப்பதற்கு-
இலகு மாமலர்ச் சேவடி ஏத்துவாம்.

4. யசோதர காவியம்

குறிப்புரை :

1. யசோ, காப்பு, கேவலத்து - கேவல ஞானத்தைக் கொண்டுள்ள அலகு - அளவு ; அனந்த குணக்கடல்- கடையிலா ஞானம் முதலாகச் சொல்லப்படும் குணங்கள் நிரம்பிய கடலாகிய அருகபர மேட்டி; விலகி வெவ்வினை என்பதனை வெவ்வினை விலகி என மாறிக்கூட்டுக; இலகுதல்-விளங்குதல் ; ஏத்துவாம் - வாழ்த்தி வணங்குவோம்.

## இறைவனது அறம் தரு பயன்

1. அருள்புரி மனத்தர் ஆகி,
   ஆருயிர்க்கு அபயம் நல்கி,
   பொருள்கொலை களவு காமம்
   பொய்இவை புறக்க ணித்திட்டு,
   இருள்புரி வினைகள் சேராது
   இறைவனது அறத்தை எய்தின்,
   மருள்செய வருவது உண்டோ,
   வானவர் இன்பம் அல்லால்?

## யாசோதர காவியம்

2. ஆக்குவது ஏதுஎனில், அறத்தை ஆக்குக!
   போக்குவது ஏதுஎனில், வெகுளி போக்குக !
   நோக்குவது ஏதுஎனில், ஞானம் நோக்குக !
   காக்குவது ஏதுஎனில், விரதம் காக்கவே !

9. குறிப்புரை : யசோ 300 புரிதல்-நினைதல் ; அபயம்-அடைக்கலம், ஆதரவு; பொருள் - பிறன் பொருள் வெளவல் ; புறக்கணித்திடுதல் - சேராது நீக்கிவிடுதல் ; இருள் - அறியாமை ; இறைவனது அறம் - அருகபரமன் அருளிய திருவறம்; மருள் - மயக்கம் ; வானவர் இன்பம் - தேவகுல இன்பம்.

10. குறிப்புரை : போக்குவது - நீக்கத்தக்கது வெகுளி - சினம் ; நோக்குவது - ஆராயத்தக்கது ; ஞானம் - ஞான நூல்கள்; விரதம் - பல்வகை விரதங்கள்.

